





ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம:

# ஸ்ரீமத் வேதாந்ததேசிக
# வைபவப்ரகாசிகைக் கீர்த்தனை.




இஃது

மத்தியார்ஜுநம்,

அநந்தபாரதி

இயற்றியது.

---

இன்னம்பூர்

ஸுந்தரராகவ அய்யங்கார் அவர்களால்,

கும்பகோணம்

ஸ்ரீ கோமளாம்பா அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

---

1930 ௵ ஜூன்-மீ } 0—8—0







ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம:

## ஸ்ரீமத் வேதாந்ததேசிக

# வைபவப்ரகாசிகைக் கீர்த்தனை.

இஃது

மத்தியார்ஜுநம்,

அநந்தபாரதி

இயற்றியது.

இன்னம்பூர்

ஸுந்தரராகவ அய்யங்கார் அவர்களால்,

கும்பகோணம்

ஸ்ரீ கோமளாம்பா அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

இதன் விலை. 1930 ஹு ஜூன்-மீ 0—8—0




ஸ்ரீ:ஸ்து.

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம:

# முகவுரை.

ஸ்ரீ வைஷ்ணவசித்தாந்தஸ்தர்களான வடகலை ஸம்பிரதாயஸ்தர்களுக்கு முக்கிய பரமாசாரியர் ஸ்ரீமன் நிகமாந்தமஹாதேசிகன் என்பதை இயாவருமறிவர். இம்மகாதேசிகனது அவதாரவிசேஷமும், தேசிகனுல் அனுஷ்டித்ததினசரியைகளும், தேசிகன் திருவாய் மலர்ந்தருளிய ஸம்ஸ்கிருத திராவிடகிரந்தங்களும், இன்னும் தேசிகன் அன்னிய மதங்களை தர்க்கத்தில் ஜயித்து, ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தத்தை ஸ்தாபித்ததுமுதலான சரித்திரங்களை ஸம்பிரதாயஸ்தர்களனைவரும் அவசியம் அறிந்துகொண்டிருக்கவேண்டும்.

அவ்வாறு அறிந்திருந்தால் நம்முடைய ஸம்பிரதாயஸ்தர்களுக்கு நமது சித்தாந்தத்தினிடமும் ஸ்ரீ நிகமாந்தமகாதேசிகனிடமும் விசேஷமதிப்பும் பிரதிபத்தியும் உண்டாகாமலிருக்கமாட்டாது. தேசிகனது வைபவங்கள் ஸமஸ்கிருதத்தில் விசேஷமாகவிருப்பதாலும், வடகலை குருபரம்பரையில் விசேஷமாக ஸம்ஸ்கிருதபதங்கள் உபயோகிக்கப்பட்டிருப்பதாலும், ஸம்ஸ்கிருதத்தை விசேஷமாக அப்பியஸித்திருக்காதவர்களும், நமது ஸ்திரீகளும் தெரிந்துகொண்டுஒய்வுகாலங்களில்படிக்கவும், அப்படிப்படிப்பதில் இராக தாளத்தோடு சேர்ந்த கிருதிகளாகஇருந்தால் அதைப்படிப்பவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் அதிகமாக மனங்கசிந்து, நமது ஸம்பிரதாயத்திலும்தேசிகனிடத்திலும்விசேஷஆஸக்திஉண்டாகக்கூடும். இதைக் கருதியே, மகாவித்வான் அனந்தபாரதி என்பவர் வெகுகாலத்திற்கு முன் இயற்றி அச்சிட்டிருந்த ஓர் பழைய பிரதியைக்கொண்டு இப்புஸ்தகத்தை அச்சிட்டு வெளியிடத்துணிந்தேன். இப்புஸ்தகத்தை நமது ஸம்பிரதாயஸ்தர்கள் அனைவரும் கைக்கொண்டு, இயாவரும் தேசிகனிடம் விசேஷ பக்தியுடையவர்களாகி அவருடையதிவ்யகடாக்ஷத்திற்குப்பாத்திராகவேணுமாய் பிரார்த்திக்கிறேன்.

இந்த ஸத்கைங்கர்யத்திற்கு முன்னதாகவே உதவிசெய்த ஸ்ரீமான்களுக்கும், இக்கைங்கர்யத்திற்கு தம்மிடமிருந்த ஒரு பழைய பிரதியைக் கொடுத்து உதவிய எம்பளச்சேரி. ஸ்ரீ-உப-வே, வித்வான் சேட்லூர் ஸுந்தரராஜாசாரியார் ஸ்வாமிக்கும், இப் புஸ்தகத்தை அச்சிட்டு வெளியிட எல்லாவிதங்களிலும் பெரிய உபகாரியாகவிருந்த திருக்குடந்தை ஸ்ரீகோமளாம்பாபிரஸ் அத்தியக்ஷர்களில் ஒருவரான சின்னமு, ரே. ஸ்ரீநிவாஸபாட்டராசாரியார் ஸ்வாமிக்கும் நான் விசேஷ கிருதஜ்ஞதையுள்ளவனாக இருக்கிறேன்.

கும்பகோணம்,
23—6—30.

இப்படிக்கு.
இன்னம்பூர், ஸுந்தரராகவன்.



॥ श्रीः ॥



கொண்டருகக்குந்துணையடிவாழிநின்தூமுறுவல்
கொண்டமுகம்வாழிவாழிவியாக்கியாமுத்திரக்கை
வண்டிருநாமமும்வாழிமணிவடமுப்புரிநூல்
கொண்டசீர்தூப்புல்குலமணியேவாழிநின்வடிவே.





ஸ்ரீ:







ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதே நிகமாந்தமஹாகுரவே நம:

# ஸ்ரீ வேதாந்ததேசிக வைபவப் பிரகாசிகைக் கீர்த்தனை,

காப்பு-ஆசிரிய விருத்தம்

பொன்னுறையுமணிமார்பனீலவண்ணன்

பூங்கமலங்கண்கைமுகப்பாதன்வேத

மென்னுமுயர் வேங்கடவெற்பினில்விளங்கு

மெம்பெருமான்கண்டாவதாரமான

பன்னுபுகழ்வேதாந்தகுருவிலாசம்

பைந்தமிழாற்கூறுதற்கே சேனைநாதன்

முன்னின்றுசுபந்தருவானவன் சீர்பாத

மூப்பதாமிங்குவந்துகாப்பதாமே. (க)

இதுவுமது.

வேங்கடநாதார்யகவிவாதிசிங்கர்

வேதாந்தாசார்யரெனவிளங்கிநாளும்

பாங்கு பெறுதூப்பினகரநந்தசூரி

பாலராய்வந்துதித்துப்பாரின்மீது

ஓங்கியராமாநுஜஸித்தாந்தஞ்செய்து

முபநிஷதப்பொருளெல்லாம்வெளியாக்கண்டா

ரீங்கிவரையாமெல்லாமனத்துளாக்கி

யெண்ணுவோம்வந்தநந்தான்பண்ணுவோமே. (உ)

விருத்தம்.

ராமாநுஜதயாபாத்திரரேயாகி
ஞானவைராக்கியபூஷணஸம்பன்னர்
தாமனூர்வைபவப்பிரகாசிதன்னைத்
தமிழினாற்கீர்த்தனையின்வரிசைபாடப்
பூமாதுமணவாளனுதியாகப்
புகழ்நாதயாமுநரேநடுவாய்நின்று
ஹேமாசானுதிகுருபரம்பரைக்கே
யென்செய்வோம்வணங்குதலையுஞ்செய்வோமே. (௩)

எம்பெருமான்றிருவடியேசொர்ணமாக
இதரங்கள்யாவைகளுந்துரும்பாவெண்ணி
நம்பினவரெங்கள்குருகருணைவாரி
நல்லிராமாநுஜனூர்சரணம்போற்ற
அம்புவியிலெங்கணுமேபுகழுந்தூப்பி
லநந்தசூரியர்குமரர்பூர்ணசந்த்ர
விம்பமாம்வேதாந்ததேசிகன்றன்
விலாசந்தான்சரஸ்வதிவிலாசந்தானே. (௪)

எந்தமுடைக்குலங்களுக்குத்தந்தைதாயா
யிசையுவதிதநயர்நிறைசெல்வமெல்லாந்
தந்தருளியெங்கள்குலப்பதியாய்நின்று
சரணமாய்வகுளமலர்த்தொடையல்வேய்ந்த
அந்தமுதற்குரவனடிவாழ்த்தியிந்த
அற்புதவேதாந்தகுருவிலாசந்தன்னைச்
செந்தமிழ்க்கீர்த்தனையாகச்செய்யவெங்கள்
தேசிகரேவாக்கமுதந்தந்தாள்வாரே. (௫)

வாழ்வானகீர்த்திமிகும்பூதர்பொய்கை
வன்பேயர்பட்டர்பிரான்பத்திசாரர்
சூழ்செய்குலசேகரனூர்யோகிவாகர்
தொண்டரடிப்பொடிகலியனெதிகணுதன்
தாழ்வியாதுமிலாதபராங்குசருந்தேனூர்
தண்டுளவத்தார்முடியனடியான
ஆழ்வாராசிரியர் திருவடியேசென்னி
யணிகுவோமனுதினமும்பணிகுவோமே. (௬)

### மங்களம்-தரு-இராகம்-சுருட்டி-தாளம்-ஆதி.

பல்லவி.

வேதாந்தாசார்யருக்கு ஜயமங்களம் - எங்கள்
வேங்கடநாதார்யருக்குச் சுபமங்களம்

அநுபல்லவி.

மேதாவிசுசு சீலருக்கு மெய்ப்புகழ்விசாலருக்குத்
தோதாரம்மன்பாலருக்குத் தொண்டரனுகூலருக்கு (வேதா)

சரணங்கள்.

கவிவாதிசிங்கருக்குப் புங்கவர்க்கு மங்களம்
கண்டாவதாரருக்குத் தீரருக்கு மங்களம்
திவியமாலைக்கர்த்தருக்குத் தரிசனப்பிரவர்த்தகர்க்குக்
கவலையில்லாச்சித்தருக்குக் கண்ணனடிப் பத்தருக்கு (வேதா)
சகலஜநபூசிகர்க்குத் தேசிகர்க்கு மங்களம்
சர்வதந்த்ரம் வல்லவர்க்கு நல்லவர்க்கு மங்களம்
பகவநாமவாசகர்க்குப் பாசவினைரேசகர்க்குப்
அகிலபாபமோசகர்க்கு அயக்கிரீவோபாசகர்க்கு (வேதா)
தூப்பின கராதியர்க்கு வேதியர்க்கு மங்களம்
சொற்பொருளாளருக்கு ஆளருக்கு மங்களம்
யாப்பினில்விசித்திரர்க்கு அநந்தசூரிபுத்திரர்க்குக்
காப்புவேதவத்திரர்க்கு கமலநயனர்பௌத்திரர்க்கு (வேதா)

வெண்பா.

சீரார் குடந்தைத் திருக்கண் வளர்கின்ற
ஆரா வமுத னடியிணையை — நேராகிச்
சென்றடைந்த வேதாந்த தேசிகன்றன் வைபவத்தை
இன்றெடுத்துச் சொல்லுவேன் யான்.

### தரு-இராகம்-அசாவேரி. தாளம்-ஆதி.

பல்லவி.

நாராயணனெங்க ளாராவமுதனே
நாவேதுதிகுண மேவே

அநுபல்லவி.

சீரார்குடந்தையிற் செழிக்குங்கோமளவல்லி
சீரங்கந்தழுவிய காரங்கமேனி சாரங்கபாணி (நாரா)

சரணங்கள்.

நலமிகுந்ததன்மார்பிற் கவுத்துபமணிபோலே
நாடுஞ்சகலஜீவ கோடிகளொருகாலே
கலுஷமதியார்கிங்க ராதிராச்சியமேலே
கடந்ததன்றிருவடி காணவேபரிவாலே

சொலுங்கரணகளேப ராதிகளைத்தொடுத்துத்
தொடர்ந்ததினலன்னிய பரஞ்சேராமற்றடுத்து
உலகம் பிழைக்கவேண்டி. வேதங்களைக்கொடுத்து
உரையறிந்திடவேநற் சாத்திரங்களுமடுத்து
நலவிதிகாசப்பிர மாணங்கள்செய் புராணங்கள்தந்த (நாரா)
சநற்குமாராதிகளால் மோட்சசாத்திரங்களோதித்
தானேநாரதபரா சரசுகசவுனகாதி
கனத்தரிஷிகளிட்டாத் துமசம்பிரதாயரீதி
கண்டு நடத்தியின்னம் வியாஸமுனிவராதி
தனித்தமுனிவர்களுந் தாமாகவே பிறந்து
சாரீரகாதிகளைப்பிர வர்த்திசெய்தேதிறந்து
அனைத்துலகங்களிலும் யாவைகளுநிறைந்து
அணுவுக்கணுமலைக்கு மலையாகவேசிறந்து
மனத்திலெண்ணியதருள் வாசுதேவநங்கேசவதிரு (நாரா)
ஆளிட்டுப்பிரவர்த்திக்கை செயவும்வேண்டுமென்றன்றே
அன்னமச்சவயக்கிரீவ நரநாராயணரென்றே
நாளிட்டுவராகராம கீதாசாரியரென்றே
நல்லவவதாரங்க ளாலேதான்வெளிநின்றே
ஆளுந்திறமைசொல்லிப் புருஷார்த்தங்கள்விண்டு
அறிவிக்கச்சீவன்கள் தன்னையறிந்துகொண்டு
தாளுந்தடக்கைகளுங் கூப்பிப்பணிதல்கண்டு
தானேதரிசனத்தை வளர்த்திநின்றானேபண்டு
வாளுஞ்சங்கமுந்திரு வாழியாருயராழிபாரரி. (நாரா)

விருத்தம்.

கோதிலாத்தமிழாசாரியர்களின்னங்
குகதேவர்பாவருசிகபர்த்திமூவர்
மாதிரமேற்ப்ரவர்த்தகராம்டீகாசார்யர்
வாக்கியகாரருமெனவேபிரமநந்தி
ஓதுமிவர்களுக்குப்பின் யுகாரம்பத்தி
லுற்றநம்மாழ்வாரெனவேதூப்பிற்பிள்ளை
யாதிசம்ப்ரதாய பரிசுத்திதன்னி
லருள்செய்தார் வேதாந்தப்பொருள்செய்தாரே.

திருமுடியடைவு.

தரு-இராகம்-மோகனம்-தாளம்-ஆதி.

பல்லவி.

வாயேநம்மாழ்வாரைச் சொல்வாயே.

அநுபல்லவி.

வாயேநீயேவேதந்தமிழ்செய்த
மாறன்சடகோப னேயென்றேபிரு. (வாயே)

சரணங்கள்.

அம்போதிநீரை மேகம்வாங்கி
யபிநவமாகவே யுமிழவேதாங்கி
அம்புவியெங்கும் விளைவுகளோங்கி
யதுபோலேயிவர் வேதங்கணைங்கி
னுண்பொருள்கண்டு சொரிந்தாரே
நுவலடியார்கள் வலிந்தாரே
நம்புவாய்நம்புவாய் குருகூர்வள்ளலே
நாதமுனிகளே யோதுங்குருவென்று (வாயே)

கலியுகமாதியிற் பிரவர்த்திநாடினர்
கண்ணனடியிணை கண்டுகூடினர்
நலிவதில்லாமலே யன்புசூடினர்
ஞானனந்த மடுவினிலாடினர்
நலமதுரகவியில் வல்லோரே
ஞாலம்புகழு நல்லோரே
சொலுவாய்சொலுவா யவர்சிரடியிணைத்
துதித்துநெஞ்சினிற் பதித்து அனுதினம் (வாயே)

சகலர்க்குமதி காரமதான
தமிழதினாலே வேதநிதான
மிகவேசொல்லு முறுதிமெய்ஞ்ஞான
விளைவாய்வந்து தரிசனமான
தகைமைபொருந்திய ஆழ்வாரே
தண்குருகூரினில் வாழ்வாரே
மிகவேமிகவே பரவுகபரவுக
வீடுபெறும்படி கூடிவந்திரு (வாயே)

விருத்தம்.

நம்மாழ்வார் தமக்குப்பின்ப்ரவர்த்தாரனர்
நாதமுனியுயக்கொண்டார்மணக்காநம்பி
இம்மாநிலம்புகழவந்தாரான
யாமுனரோடெதிபதியும்ப்ரவர்த்தாரனர்
எம்மான் வியாஸபோதாயனாதி
யிடம்விரையாழ்வார்களிடமங்குரிக்க
உம்மாங்குயாமுனைதிகளிடத்தி
லோங்குதரிசனந்தளிராய்ச் செழித்ததன்றே.

## விருத்தம்.

வணிதமாந்தரிசனந்தான் பாஷ்யகாரர்
மகிமையான்மரமாகிக்கனைகண்மீற
அணிபெரும்பூதூரில்வந்தேயவதரித்தார்
யாதவப்பிரகாசரிட நூல்கள்கற்றார்
அணிபெரியநம்பி திருவடியைச் சார்ந்தங்
காளவந்தாரவர்க்கருளுஞ்சம்பிரதாயம்
பணிவிடையாலவர்பக்கலெல்லாங்கேட்ட
பாங்கினர் வரவரவு மோங்கினரே.

## தரு-இராகம்-பைரவி-தாளம்-ஆதி.

### பல்லவி.

எம்பெருமானர் சம்பிரதாயந்தனை
இன்னதென்றுரை செய்வாய்மனனே.

### அனுபல்லவி.

அம்புவிமீதினி லணிபெரும்பூதுரி
லவதரித்தருளிமா தவனடியிணை கண்ட (எம்)

### சரணங்கள்.

யாதவப்ரகாசரிடஞ் சாஸ்திரங்கள்படித்தாரே
அறிந்துபெரியநம்பி திருவடியைப்பிடித்தாரே
மேதினிமேலாளவந்தார் சம்பிரதாயந்தடித்தாரே
விதங்களெல்லாமறிந்து மாயிகளையடித்தாரே
சாதகமாகவே திருக்கோட்டியூர்நம்பி
சந்நிதிதனிற்சென்று காத்துமிகவுநம்பி
நீதிசரமசுலோகந் திருமந்திரம்விளம்பி
நிலைகள்சொல்ல அறிந்து நின்றாரின்னந்திரும்பி (எம்)
திருவரங்கப்பெருமாளரையார் சந்நிதியடுத்தாரே
திருவாய்மொழியையோதித்தோத்ராதிகளையெடுத்தாரே
திருமலையாண்டான் சந்நிதிதன்னிலன்புதொடுத்தாரே
திருவாய்மொழிக்குப்பொருள் விண்டுகவலைவிடுத்தாரே
திருமலைநம்பிசந் நிதியிலிராமாயணம்
தெளிந்துவரவரவே சாந்தமீறவுங்குணம்
திருமலைகோயில்பெரு மாள்கோயினாராயணம்
திவ்யதேசங்களெல்லாந் திருத்தினரேபூஷணம் (எம்)
திக்குவிசயஞ்செலுத்திச் செயவிருதுமீறினரே
சிறந்துதான்சரஸ்வதி பீடமதிலேயேறினரே
மிக்கவேபோதாயநவி ருத்தியைக்கண்டு கூறினரே
விளங்கும் ஸ்ரீபாஷ்யமதை விரிவுசெய்து தேறினரே

தக்கசரஸ்வதியுஞ் சிரசில் வகித்து நல்ல
தகுமான கிரந்தமென்ற பாஷியமதுவேசெல்ல
இக்குவலயங்களிற் சகலகலையும்வல்ல
ரிவரேமீண்டுங்கோயி லேறவெழுந்தார்சொல்ல (எம்)

### இதுவுமது விருத்தம்.

கோயிலதிலெழுந்தருளித்தமதுசீடர்
கூரத்தாழ்வான்முதலியாண்டான்கல்வி
ஆயுமறிவேமிகுந்தநடாதூராழ்வா
னருளாளப்பெருமா ளெம்பெருமானாராம்
சே யெனவேஞானபுத்ரராகிவந்த
திருக்குருகைப்பிரான்புள்ளான்கிடாம்பியாச்சான்
ஆயவர்க்குப்பாஷியமுமாழ்வாராய்ந்த
அருங்கலையின்ரகசியமுமளித்திட்டாரே.

### இதுவுமது விருததம்.

அதிகபத்தியாயெதிகளேழுநூற்று
ராலேசஞ் சேவிதராயவனியெல்லாம்
துதிசெய்யவெழுபத்துநாலுபீடந்
துலங்கவதிற்சம்மதராயிருந்துஞான
நிதியென்றேபரமவைதிக ரநேகர்
நிலைகொண்டு துதித்திடவேயரங்கமீதி
லெதிசார்வபூமரெனவனுசந்திக்க
இருந்திட்டார்தரிசனமும்புரிந்திட்டாரே.

### தரு-இராகம்-தோடி-தாளம்-ஆதி.

பல்லவி.

தரிசனபரம்பரைகளின்னந் - தெரியச்சொல்கிறேன்.

அனுபல்லவி.

தரணிமீதினிலரங்கமாநகர் வருமெதீந்த்ரரைப்பரவிவந்திடும் (தரிசன)

சரணங்கள்.

உபயவேதாந்த விபவங்களெல்லா
மபிவிர்த்தியாகிச் சுபகுணந்தந்து
நிபிடசீடர்கள் ப்ரபலமேகொண்ட
சபையெதீந்த்ர தபோநிதியவர் (தரிசன)

மாம்பலாக்கனி தேன்பொழிவைப்போற்
றும்பிரசாதிக்குஞ் சாம்பிரதாயமே
லாம்பிரகாசர்கி டாம்பியாச்சானென்
றும்பிரபாகர ராம்புராதன (தரிசன)

ஆத்திரேயர்தன் கோத்திரத்தினில்
வாய்த்தனர்பிரண தார்த்தியபஞ்சனர்
சாத்திரரீதிகள் பார்த்தெதிராச
நேத்திராாகவே காத்திருந்தவர் (தரிசன)

## விருத்தம்.

மண்டலமெலாம்புகழுமெதீந்திரர்க்கே
மகரநசிகராகவந்தகிடாம்பியாச்சான்
தொண்டுசெய்துரகசியத்தின்பொருளையெல்லாஞ்
சொலக்கேட்டுத்தமக்குற்றகுமாரபாக்யம்
கண்டிடவிராமாநுஜன்றனென்றே
கருணையாய்த்திருநாமஞ்சாத்திப்பின்னும்
பண்டையுடையவர்பிரசாதித்ததெல்லாம்
பாலிப்பார்மிகவுமனுகூலிப்பாரே.

## இதுவுமது விருத்தம்.

மேதாவிராமாநுஜப்புள்ளானும்
மேதினியிற் ப்ரசித்தராயுபயமான
வேதாந்தப்ரவர்த்தராமவர்குமாரர்
விபுதர்பத்மநாபரென்போர்கருணைதன்னு
லேதாரணியில்வந்துபிரபலங்கொண்டா
ரோமாநுஜப்புள்ளானென்றோர்மைந்தன்
தோதாநாயகியெனுங்குமார்த்தியாருஞ்
ஜொலிக்கின்றார்பிறந்துபிரபலிக்கின்றாரே.

## இதுவுமது.

கண்ணிகள்-இராகம்-சௌராஷ்டிரம்-தாளம்-ஆதி.

பூமாதிருக்குங்கிடாம்பிபற்பநாபர்
புண்ணியசாலிகுமாரர் - எங்கும்
ராமாநுஜப்புள்ளானென்றுசொல்லுந்திரு
நாமந்தரித்தவர்பேரர். (க)

வாலவயதுதொடங்கிச்சதுராய்
மண்டலயீதினிலோங்கத் - தந்தை
பாலிற்சகலங்களானகலைஞான
பாரங்கதப்பெயர்தாங்க. (உ)

சத்தமுந்தர்க்கமுமீமாஞ்சாதியாஞ்
சாஸ்திரமதிகரித்தாரே - தம்மைப்
பெற்றவராலேயறிந்தபின்வேதாந்தா
பேக்ஷையுடனிருந்தாரே. (௩)

இங்கிதைக்கண்டுமெங்குள்ள பெரியோ
ரிவருமப்புள்ளாரோவென்றே - அரு
ளங்ஙனேசெய்தாரேயன்றுமுதலாக
வப்புள்ளாராயினரன்றே. (௪)

இங்கிப்படித்தாமேசீரங்கப்புள்ளா
ரெனும்பத்மநாபர்க்குவாய்த்த - வேத
புங்கவரப்புள்ளார்தாமுமிருந்தார்
பொருந்துங்கதையின்ஞ்ஸசாற்ற. (௫)

செய்ய எதீந்திரர்க்குஞானபுத்திரரான.
திருக்குருகைப்பிரான்புள்ளான் - அவர்
துய்யவணுகிய எங்களாழ்வானுக்குச்
சொல்லவுமேமனதுள்ளான். (௬)

மாருதபாஷ்யமுதலானவேதாந்த
மார்க்கந்திருவாய்மொழிக்குத் - துன்னு
மாறுயிரப்படியிட்டாரேயின்ன
மநேகபிரபந்தம்விழிக்கு (௭)

பாத்திரராக்கிரகசியமெல்லாம்
பரிந்துபிரசாதித்தாரங்கே - மன
தேத்திப்பணிவிடைசெய்துமிருந்தாரே
யெங்களாழ்வானவரிங்கே. (௮)

எம்பெருமானருடன்பிறந்தாள்பிள்ளை
யென்றுஞ்சரஸ்வதிபீடம் - தானே
யம்புவிமீதினிற்பாஷ்யஸிம்ஹாஸன
வாதிக்கம்பெற்றவிசேடம். (௯)

தேசப்பிரசித்தநடாதூராழ்வானுக்குச்
சேருந்திருப்பேரனாராம் - தேவ
ராஜப்பெருமாளுடையகுமாரர்
நடாதூரம்மாளென்னும்பேராம். (௰)

சகலசாத்திரபாரங்கதத்துவமே
தாவிநடாதூராழ்வாரே - உயர்
ஜெகப்பிரசித்தருமாகியிருந்து
சிறந்துபாரில்வாழ்வாரே. (௰௧)

அவர்தமையனுங்கந்தாடைத்தோழப்ப
ரனுமதிதானேகண்டு - வெகு
சவரணையாகஎங்களாழ்வானுக்கே
தானபுத்திரகிர்த்தியமுங்கொண்டு. (௰௨)

சந்தேகநீங்கும்ஸ்ரீபாஷ்யமுதலான
தத்துவதரிசனரீதி - இன்ன
மந்திரமுமாகியவாறுயிரப்படி
மற்றுமெல்லாந்தாமேயோதி. (௰௩)

எங்களாழ்வானை நடாதூரம்மாளவ
ரிப்படியாசிரயித்தாரே - புவி
யெங்கும்பிரசித்ததரிசனராகி
யிருந்துமகிமைபெற்றாரே. (௰௪)

## நடாதூரம்மாள்-தரிசனம்-விருத்தம்.

சீராகுநடாதூரம்மாளுந்தாமே
சிறந்திடுங்கிடாம்பியப்புள்ளார்தமக்குஞ்
சீராமப்பிள்ளைதிருப்பேரனாருஞ்
ஜெயவாக்கால்வென்றபட்டர்திருக்குமாரர்
போனதிசைவியாசபட்டருக்குப்
பின்னும்ஸ்ரீபாஷ்யமப்பங்கார்க்குந்தாமே
நாராயணன்றிருவடிப்பிரவர்த்தி
நாட்டினார்ஸகலகலைநாட்டினாரே.

## இதுவுமது-விருத்தம்.

செப்பமாநடாதூரம்மாள்சீர்பாதஞ்
சேர்ந்துவேதாந்தமெல்லாந்தெளிந்தேயெங்க
ளப்புள்ளார்தரிசனத்தைவளர்க்குநாளி
லவனியெங்குங்கொண்டாடவிருந்தாரிப்பால்
மைப்புயலிற்றிருமேனிமுதல்வனெங்கள்
வரதராஜப்பெருமாள்மகிழ்ச்சிபொங்கி
யெப்பொழுதும்வளர்பதியேகாஞ்சியென்ன
வேத்துவார்முனிவரெலாம்போற்றுவாரே.

## கஞ்சி-மகிமை.

### தரு-இராகம்-எதுகுலகாம்போதி-தாளம்-ஆதி.

பல்லவி.

காஞ்சிபுரி வாஞ்சி - தந்தானே
காக்ஷிவரதர்காணியாக்ஷி.

அனுபல்லவி.

காஞ்சனநவரத்தினமே லாஞ்சிறைப்பாலி
கன்னல்சென்னல்-தென்னஞ்சோலைகதிகபுண்ணியவேலி (காஞ்சிபுரி)

சரணங்கள்.

க. ககரமெனுமக்ஷரங் கமலாஸனன்பேரே
கண்டடைந்தாரிதானே காஞ்சியென்னுநேரே
தகைமைபெருகுமி தேதானத்திகிரியென்பாரே
ஸகலபாபங்கள் விமோசனஞ்செய்யுஞ்சீரே (காஞ்சி)

உ. எண்ணுவீரத்திகிரி யாமிந்தமலைமேலே
யெம்பெருமானைப் பிரமன்பூஜையொருகாலே
பண்ணினர்யாகமத்திலவிர்ப்பாகங்கொண்டார்பாலே
பரமபத்தராழ்வார்கள் பாடினதினலே (காஞ்சி)

௩. சூடியாரயோத்தியும் மதுரைமாயாகர்
மசால்லுங்கச்சியவந்தி நந்துவாரகைப்பிரகாசி
நாடிமுத்திதாயகமாய் நாட்டியேழும்பேசி
நல்லவர்களெந்நாளு மேகொண்டவிசுவாசி (காஞ்சி)

ச. கல்லுயர்ந்தநெடுமதில்சூழ் கச்சியென்றுங்கூடும்
காமருபூங்கச்சியென்று கண்டிசைகள்பாடும்
சொல்லுமணிமாடங்கள் சூழ்ந்ததிருநீடும்
தூயமுத்திப்பிரதமென்றேதொண்டர்கள்கொண்டாடும் (காஞ்சி)

புண்டரீகாக்ஷர். அவதாரம்.

விருத்தம்.

சுயமதுரகனிசிறந்தமரமேலெங்குந்
தூயகுயில்கூவுமிளஞ்சோலைசூழ்ந்தே
வயல்களெல்லாங்கரும்புசங்குசெங்நெல்வேயின்
மணிபரவிவேகவதிவடபாற்கொண்டே
சயிலவரமெனுமத்திகிரியாங்காஞ்சி
ஸத்யவிர்தநாமக்ஷேத்திரம்விளங்க
வுயர்புண்டரீகாக்ஷதீக்ஷிதார்ய
ருண்டானர் ஹரிபதத்திற்றெண்டானரே

தரு-இராகம்-புன்னகவராளி-தாளம்-ஆதி.

பல்லவி.

உண்டானரேவரதர்பொன்னடித்தொண்டானரே.

அனுபல்லவி.

மண்டலமீதினில்வரும் பண்டிதர்களாலேபுகழ்
கொண்டதிருநாமம்பெற்ற புண்டரீகாக்ஷதீக்ஷிதர் (உண்)

சரணங்கள்.

௧, அனன்னியப்பிரயோசனராய் - வருணாச்சிரமாசார
மதநிலைகள்தவறார்
மனநிலையின்மாறாமலேகனநியமமாயரியை
யனுதினமுநேராயாராதனவிதிகள்தாமேசெய்பவர் (உண்)

௨. செகம்புகழுஞ்சோமயாசி - அக்கினிஷ்டோமாதிவெகு
மகஞ்செய்வதினாற் பிரகாசி
பகவன்றன்னை நாரணனை மிகவந்தனைசெய்து வேதாந்
தகைவலியநாடிவாழ்வேமிகைவுள்ளவராகவேதாமும் (உண்)

௩. வபாபரிமளவுல்லாச - வாசந்தருமதா
ஸபானனவரதராஜ
கிருபாநிதி யிவரேவசுதேவபாலகிருஷ்டிணமூர்த்திபரம
புருஷராமெனவேதுதிஞானப்பிரபாகரருமிவரேயெனவந்து (உண்)

அநந்தசூரி அவதாரம்-விருத்தம்.

ஆனைமலைவரதனுக்கேபிரீதியாக
வநேகயாகங்கள் செய்தார் ஸோமயாஜி
தானதனாற்சரீரவாரோக்கியமின்னந்
தழைக்கின்றபோகங்களயிஸ்வரியங்கள்
ஞானங்கண் மேன்மேலா வரதர்தந்து
நல்லகுமாரனையு மங்கேதந்தாரந்த
வானுஷங்கிகப்பலமாய்வந்தவேத
வாரிதான் உயரனந்த சூரிதானே.

தரு-இராகம்-சங்கராபரணம்-தாளம்-சாப்பு.

பல்லவி.

உதயஞ்செய்தனரே - அநந்தசூரிய - ருதயஞ்செய்தனரே

அனுபல்லவி.

உதயஞ்செய்துகச்சிவ - ரதர்தந்தகிருபைகொண்டுன்
னதபுண்டரீகாக்ஷ தீக்ஷிதர்தந்தசுகுமாரர் (உதயம்)

சரணங்கள்.

௧. தாதைசெய்தசோம யாகத்தின்பலனே
தழைக்குங்கச்சிவரதர் தருங்கிருபைநலனே
மேதினிதனிலெங்கும் வேதமானதுவிளங்கி
நீதிசாரமிதுவென்றே க்யாதியாயறிந்திடவே (உத)

௨. ஜொலிக்குங்காந்தியுள்ள சுகிருதஞ்செய்தேகஞ்
சுபக்கிரக பலமிக்க குருசந்திரயோகம்

பலிக்குமவரெங்கும்பிர பலிக்கும் வரதரையஞ்
சலிக்குந் திருக்கையாளர் கலிக்குப்புதுமையாக (உத)

ரு. சுருதிதன்னிலேபாரங் கதராகினரே
தொடுத்தெல்லாஞ்சித்தாந் தரீதியறிந்த்னரே
குருகுல வாசமது உரிமையாகவேசெய்து
பிரமசாரிவிரத மருவினவருமிங்கே (உத)

விருத்தம்.

இப்படியேசித்தாந்தரீதியெல்லாம்
இசையநந்தாசாரியர்க்குத்தந்தையானுர்
செப்பமாங்கிடாம்பிபத்மநாபனென்னும்
ஸ்ரீரங்கவப்புள்ளார்குமாரியாகி
அப்புள்ளார்தங்கையுமாய்வந்ததோதா
ரம்மளையேதிருக்கலியாணந்தான்செய்து
வைப்பவேததர்மபத்னியுடனேகூடி
வருகின்ருர்வரதருள்பெறுகின்ருரே.

கலிநிலைத்துறை.

பண்கண்டேயறிவதற்குமரியராய்ப் பத்தபராதீனராகி
விண்கண்டதேவர்கட்குந்தேவரா மிவரெனவேவேங்கடத்துட்
டண்கண்டகோனேரித்தென்கரைமேற் கலியுகத்திற்சகலபேற்குங்
கண்கண்டதெய்வமென்றே வேங்கடாசலபதியைக்கருதுவாரால்.

தரு-இராகம்-பூரிகலியாணி-தாளம்-ஆதி.

பல்லவி.

தெள்ளியார்வணங்குமலை - திருவேங்கடமலை
ஸ்ரீநிவாஸனுறை திருமலையே.

அனுபல்லவி.

வெள்ளிநிறங்கொண்டபுள்ளிமானேடியோடித்
துள்ளிவேங்கைப்புலியைத்தள்ளிவிளையாடுமலை. (தெள்ளி)

சரணங்கள்.

விளங்கும்பிர்மாண்டத்திலொருபக்கத்திலுமிந்த
வேங்கடாத்திரிக்கு நிகரேது
வளங்கொண்டளவில்லாதசருவரத்தினமய
கிரிமண்டலத்திலபுண்ணிய ஸ்தலமீது
களங்கமில்லாஸ்வயம்புஜந்துபனிடபரூப
வேங்கடபூதரமென் றெங்குமோது

உளங்கொண்டபிரிதிநாராயணர்க்கிந்தமலை
யுன்னதப்பிரஸன்னமிகுசொன்னமுயர்நன்னளினம். (தெள்ளி)
பாற்கடல்வைகுந்தமிரவிமண்டலமத்தி
பகருமிந்தமூன்றெனுந் தானம்
பார்க்கிலதிகமெங்களலர்மேன்மங்கைரமண
பரமபுருஷர்க்கு நிதானம்
தீர்க்கமிதுவாமென்றேயாழ்வார்கள்பாடல்பெற்ற
திவ்யதேசம்விளங்கும் விமானம்
எற்குங்கோனேரித்தீர்த்தமகிமையுமதின்தென்பா
லெந்தாதைவைகுந்தாதிபனந்தாவிலாசந்தானிது (தெள்ளி)
கலியுகத்தினிலிந்தவுலகந்தனிலேயார்க்குங்
கண்கண்டதெய்வமாக நின்றே
வலியடிமைகொண்டுவினையெல்லாந்தீர்த்துமவர்
மனதபீஷ்டந்தருவ தொன்றே
பலவும்வேங்கடத்தாய்நால்வேதப்பண்ணகத்தாயென்று
பரமபத்தர்பாடின றென்றே
சொலவும்பூமகளுடன்கூடிக்கண்ணன்வளருஞ்
சுந்தரமிகுந்துபலகிரந்தமறையிந்தமலை. (தெள்ளி)

## விருத்தம்.

திசைதிசையின்வேதியர்கள்சென்றிறைஞ்சுந்
திருவேங்கடத்தானேதெய்வமென்றே
அசையாதாராதனஞ்செய்திருந்தாரெங்க
ளநந்தாசாரியரிப்பால்வேங்கடேசன்
உசிதமாந்தரிசனத்தின்விரோதமெல்லா
மொழிப்பதுநாவுடையாராலாகவேண்டி
இசையுள்ளதிருமணியாழ்வானையிப்ப
டிச்செய்தாரவதரிப்பிக்கச்செய்தாரே

## கலிநிலைத்துறை.

திருவாழிதிருச்சங்கைத்தொண்டமான்
சக்கரவர்த்திக்கீந்தேயச்சத்
துருவெல்லாந்துடைத்ததுபோல்வேங்க
டேசனம்மநந்தசூரிபாலே
அருள்செய்துதிருமணியாழ்வாரை
யவதரிப்பிக்கவன்பாயெண்ணி
யொருநாளிராத்திரிச்சொப்பனத்தி
லெழுந்தருளியதும்யோகந்தானே.

## தரு-இராகம்-மத்தியமாவதி-தாளம்-ஆதி.

பல்லவி.

மனந்தனில்மறவேனே - மகிமையை
மனந்தனில்மறவேனே.

அனுபல்லவி.

மனந்தனில்மறவாதவநந்தாசாரியர் தஞ்சொப்
டனந்தனிலெழுந்தருளி நந்தநந்தனர்வந்தார் (மன)

சரணங்கள்.

க. நீர்நம்மைத்திருவடி தொழவாருமலைமேலே
நிறைந்தகிருபைசெய்தும்மை யாள்கிறேம்பரிவாலே
சேர்வைதந்துசந்தானந் தருவோமென்றதினாலே
தெளிந்தநந்தாசாரியருந்தேவிகட்குச்சொன்னதாலே (மன)

உ. தம்பதியிவர்கள்தாமே நலமாஞ்சொப்பனம்பண்டு
தரிசனத்தையனுசந்தித் திருந்தாரன்புகொண்டு
எம்பெருமானந்த இரவினிற்கண்முண்கண்டு
இவர்கட்கருள்செய்தாப்போ லெவர்களிடத்திலுண்டு (மன)

ங. அதிசயமிதுவென்று பெருங்கூட்டத்துடன்கூடி
அநந்தாசார்யருந்தேவிகளு மன்பரகநாடி
பதியென்னுந்திருமலைக் கெழுந்தருளிகொண்டாடி
பண்பார்ஸ்ரீநிவாசனைப் பணிந்தவகையைப்பாடி (மன)

விருத்தம்.

திறமைசேரநந்தாசாரியர்க்குந்தோதா
தேவிகட்குஞ்சொப்பனத்தில்வேங்கடேசன்
சிறுபிள்ளையாய்கோயினின்றும்வந்து
தேவனையீர்நம்மைநிகர்புத்திரன்றன்னை
உறுதியாயுங்களுக்குத்தந்தோமிந்த
வுயர்ந்ததிருமணியைக்கைக்கொள்வீரென்ன
மறைவல்லோர்திருமணியையிருகையேந்தி
வாங்கினாற்புதமெய்ப்பாங்கினரே.

இதுவுமது.

திருமணியாழ்வாரையிவர்கையில்வாங்கித்
தேவிகள்கையிற்கொடுக்கவவரும்வாங்கி
யொருமையாய்நிற்கிறபோதிந்தப்பிள்ளை
யும்மணியைவிழுங்கெனவேவிழுங்கக்கண்டார்
இருவர்களுமிப்படிக்கேகண்டதாக
விசைந்துமனதன்புடனேயுற்றார்கட்கே

அருமையெல்லாமருள்செய்தார்வேங்கடேச
பாட்கொண்டார்நல்லதிருநாட்கொண்டாரே.

### தரு-இராகம்-கலியாணி-தாளம்-ஆதி.

பல்லவி.

அதிசயமின்னமென்னசொல்லுவேன் - கண்டாவதார
அதிசயமின்னமென்னசொல்லுவேன்.

அனுபல்லவி.

துதிசெய்யுமநந்தாசாரியர்க்குந்தோதாநாயகிதமக்குமே திருப்
பதிவேங்கடேசன்கிருபைசெய்தார்புண்ணியபலமும்
[நலமுங்குலமும்பலமும்

சரணங்கள்.

தாரணிக்கொருபுதுமையானது சொல்லுகிறேன்மாலே-வேங்கடபதி
சந்நிதியிலேதிருமணியாழ் வானில்லாமையாலே
பேருயர்ந்திடுஞ்சந்நிதிநம்பி மார்களின்மேலே-அதிசங்கைபண்ணிப்
பிரபலராநந்தகொத்துப் பரிசனங்களுமொருக்காலே
பாரிக்கும்படியாகமுன்னமே பண்புபெரியகேள்விஜீயர்க்கு
நேரிட்டநந்தாசாரியர்கொண்டநீ தீநீதிசரதித்தோதிய (அதி)

சுத்தராகியதானத்தரர்களுக் கெம்பெருமானே-முன்னிராத்திரிச்
சொப்பனத்திலேயருளிச் செய்ததிப்படித்தானே
ஒத்திருந்ததால்தேசபதிகளுக்கின்னஞ்சொல்வானே - நம்பிக்கைகொண்டு
உண்மைமானுஷலீலைசெய்தது வேங்கடக்கோனே
பத்தியுடனேதம்பதிகளின் பாக்கியவிசேஷங்களைச்சொல்லியே
மற்றுமெல்லாருங்கூடிவாழ்த்திடு மங்களங்களெங்குமெங்குமே (அதி)

எண்ணினபலன்பலித்ததம்பதி யிவர்களுந்தேறிப்-பெருமாள்கோயிலுக்
கெழுந்தருளியேவேங்கடபதி மகிமையைக்கூறி
புண்ணியவதிதோதாநா யகிதவமதுவீறி-மணிவிழுங்கின
பொருந்துநாள்முதற்றிரு வயிறதுவுரப்பதுமீறி
கண்ணனைமணிவண்ணனை நேமிக்கையனைநீலமெய்யனையுயர்
பண்ணகத்தனைமனதி லிருத்திப்பாடிக்கூடிநாடித்தேடிய (அதி)

### விருத்தம்.

தேவகிபிராட்டியார்தாமுமுன்னு
டிருவயிற்றினாரணனைத்தரித்தாப்போலும்
பாவனையாய்க்காந்தினியச்மகரைபின்னம்
பராசரரைத்தரித்தாப்போற்பனிரண்டாண்டு
பூவுலகிற்றிருமணியாழ்வாரையெங்கும்
புகழ்தோதாநாயகியுந்தரித்தாரிப்பால்
நாவுடையரானகண்டாமணியாழ்வாரும்
நண்ணினாரவதாரம்பண்ணினாரே.

## தேசிகர் திருவவதாரம்.

தரு-இராகம்- சாவேரி-தாளம்-ஆதி.

பல்லவி.

அவதாரஞ்செய்தாரே-கண்டாமணியாழ்வார்
அவதாரஞ்செய்தாரே.

அநுபல்லவி

புவனமெங்குஞ்செழிக்கப் புண்ணியவான்கள் பிழைக்கச்
செவையாய் ராமாநுஜ சித்தாந்தமெங்குந்தழைக்க (அவ)

சரணங்கள்.

கருணைமிகப்பெருகி விபவமென்னும் வருஷத்தில்
கதிக்கும்வளமிகுந்த கன்னியென்னுமாதத்தில்
திருவேங்கடமுடையான் ப்ரசன்னசன்னிதானத்தில்
திருக்கலியாணத்தில் தீர்த்தவாரித்திருவோணத்தில் (அவ)

அல்லும்பகலுந்துதிப் பார்கள்பவங்கள்போக
அவனியில் பிர்மத் துவேஷிகள்நிவாரணமாக
சொல்லுந்தரிசனவி ரோதநிரசிதமாகத்
தூப்புற்குடியநந்தா சார்யர்குமாரராக (அவ)

சர்வதந்த்ரசுதந்த்ரர் தாமென்றுகாட்டவே
சகலகலைஞானமுந் தன்னுரைநாட்டவே
உறுதிகொண்டுதான்பர வாதிகளை ஓட்டவே
உபயவேதாந்தகுரு வென்னும்பேர்சூட்டவே (அவ)

சீதாராமரிவர்க ளெனவேபுகழ்சிறந்து
திருவனந்தாசார்யார் தமக்குமனதுகந்து
தோதாரம்மன்வருஷம் பன்னிரண்டுஞ்சுமந்து
சுகிர்தமதனூற்பெற்ற சுகுமாரராகிவந்து (அவ)

விருத்தம்.

அவதரித்த குமாரருக்கு ஜாதகன்ம
மன்பாகச்செய்தருளியநந்தாசார்யர்
தவமறைதேர்பூசுரோத்தமர்களேத்தத்
தான்றிருவேங்கடமுடையான் திருநாமத்தை
இவருக்கே திருநாமமாகச்சாத்தி
யிசைசங்குவாய்வைத்துக்காதுகுத்திக்
கவிவாதிகேசரியைச் சூரியன்முன்
காட்டினான்னையுஞ் சீராட்டினாரே.

இதுவுமது

ஆறுகமூன்றானமாதந்தன்னி
　லருக்கன்றன்தரிசனமுநாலாமாதம்
மாறுமற்சந்த்ர தரிசனமுமின்னம்
　வருமன்னதரிசனமுஞ்செய்துவைத்தே
ஆறுணமாதத்திலன்னமீந்து
　மதற்குமேலாண்டு நிறைகலியாணந்தான்
பேறுகச்செய்துவைக்கவளர்ந்தார்தூப்புற்
　பிள்ளைதான் வேதாந்தக்கிள்ளைதானே.

தரு-இராகம்-சவுராஷ்டிரம்-தாளம்-ஆதி.

பல்லவி.

வேங்கடநாதர்தேசிகராய்வந்த வேதாந்தகுருவைப் பணிவோம்.

அனுபல்லவி.

தீங்குகள்யாவையும் நீங்கிடவேபரு
ளோங்கியசீர்புகழ் தாங்குகண்டாவதார (வேங்)

சரணங்கள்

பொருந்தியவாண்டுநிறை கலியாணஞ் செய்து
　புனிதவனந்தாசார்யர் மைந்தனையே
பெருந்தேவியாருடனே புருஷகாரமான
　பேரருளாளற்கு வந்தனையே
திருந்தவுஞ்செய்து வைக்கப் பேரருளாளருஞ்
　செல்வநம்பிராமாநு ஜன்றனையே
இருந்தினைசொலவுமே வருந்தரிசனமும்வ
ளரும்படிப்பிரவர்த்தகன் தருங்கிருபையதும் பெறும் (வேங்)
பக்ஷமதாகியமூன்றும் வருடத்திற்
　பரிந்துசவுளமது பண்ணுவித்து
அக்ஷரவாரம்ப மதுதான் ஸாமிக்கு
　ஐந்தாம் வருடத்தி லறியவைத்து
சிக்ஷைசொல்ல இவர் வாசிக்குநாளையிற்
　சேர்ந்தபுதுமைவெகு வாகவுற்று
லக்ஷணமேவிய கக்ஷிகண்மேல்வெகு
கக்ஷிகளே சொல்லி சக்ஷணரேவரு (வேங்)
ஆதிக்கமாகியவம்மான்கிடாம்பி
　யப்புள்ளாருடனே கூடிகல்ல

மேதினிபுகழும்நடாதூர்பெரியவம்மாள்
வ்யாக்யானகோட்டியின் மீதுசெல்ல
சாதகமாகவே சேவித்திருக்கும்போது
சந்தேகமொன்றுதான் தெளிந்துசொல்ல
ஓதினபேர்களு மீதென்னபுதுமையென்
றேதலேதானதை வேதசிரோமணி (வேங்)

விருத்தம்.

நடுத்தெரிந்துசந்தேகந்தீர்க்கக்கண்டு
நடாதூரம்மாளாகும்வரதாசார்ய
ரெடுத்தணைத்துமடியில்வைத்துமிக்குழந்தை
யிவ்வுலகிற்புராணஸம்ஹிதாகர்த்தாவாய்த்
தொடுத்துமுன்னே புலஸ்தியர் பராசரர்க்கே
சொன்னதுபோலவதாரவிசேஷமென்று
கொடுத்திவரைசிக்ஷிக்கத்தக்கதென்று
கொள்ளார்தாங்கிடாம்பிபினப்புள்ளார்தாமே.

இதுவுமது.

செப்பமாயிவரையுநீர்நம்மைப்பற்றிச்
சிக்ஷித்துச்சகலகலேசொல்லுமென்றே
அப்புள்ளாற்கையிற்காட்டிக்கொடுத்தா
ரக்ஷாரம்பமுதலவர்தாமேசெய்
விப்பவேயுபநீதமாகிப்பின்னும்
வேதாத்கியயனமதுபண்ணும்போதும்
அப்படித்தானேற்ருேதுமிடங்களென்ருர்க்
காராவாராளவந்தார்நோவாரே.

தரு-இராகம்-கல்யாணி-தாளம்-ஆதி.

பல்லவி.

சருவசுதந்திரசுவதந்திரசுவாமி-கண்டாவதாரவே
தாந்தகுருசேவடிசிந்தைசெய்மனனே.

அநுபல்லவி.

நறுமலர்ச்சோலேசூழ்தூப்புல் நகரமனந்தசூரி
நந்தனராகவேவந்தனர்பாரிலு யர்ந்தனர்மேனி
சிறந்தனரேயிவர்நலவுபயமறைமி ணிலேகள்
தெளியவுரைசொலவுமதுரமிகு சலநிதியெனவரு (சருவ)

சரணங்கள்.

புண்டரீகாக்ஷநாமகரான சோமயாஜி-உயர்
புண்ணியபவுத்திரரெனவருமவரேத யாம்புராசி
மண்டலமெச்சுநடாதூரம்மாள் கிருபைவாசி-மாதுலர்
வாதிஹம்ஸாம்புதாசர்யரிடமே விசுவாசித்
தண்டியேசாங்கமாகவேதந்தனையு மோர்தினரே
அதிநிபுணதையாக விதிநர்ஷபசூத்திரங்கள்
திதிசப்ததர்க்கமீமாம் ஸைதிவியசாஸ்திரங்கள்
அலங்காரங்காவ்ய நலம்பெறும் ஜோதிஷம்
பலங்களினுல்களுஞ் சொலுந்திறமாகிய (சருவ)
சாங்கியயோகமென்னுங்கபிலமதத்தை முதற்காட்டி-குருமதஞ்
சைவஞ்சயினமொடுசாங்கரபாஸ் காமுஞ்சூட்டி
ஓங்கும்பவுத்தமதம்யாதவமத மென்றுநாட்டிச்-சொல்லு
மூலகிற்பரமதங்களானவற்றின் கருவமோட்டிப்
பாங்கதாயிராமாநுஜஸித்தாந்தநிலை நிறுத்தவே
படிதனிலேயுயர் நெடியவனேயிவர்
வடிவெனவேசொலும் படியதுவாய்வரு
பவரிவரெனவிசை யெவர்களுமுறைசொல
நவநவமுடனும திவளரவளர்பவர் (சருவ)
இதிஹாசபுராணங்கள்தருமசாஸ்திரங்க ளினீதி-கரைகண்டு
மிவைகளையெல்லாமப்புள்ளார்ஸன்னி திபிலோதி
விதிமுறைப்படியாகவேபஞ்சஸமுஸ் காராதி-யதுகொண்டு
வேதாந்தபாஷ்யமும்பாஷ்யகாரர்பிர பந்தரீதி
அதிகரித்தருளித்திருக்குருகைப்பிரான் புள்ளானிட்ட
வாறுயிரப்படி பேராம்ரகஸியம்
மாறுமலேவா நாராயணர்திரு
அருளதுபெருகிய பொருளிதுவெனவுரை
தருவுபயநிகம குருமணியெனவரு (சருவ)

விருத்தம்

இருபதெனுந்திருநக்ஷத்திரத்துக்குள்ளே
யிப்படியேஸகலகலாநிபுணரானர்
விரதஸமாவர்த்தனமுஞ்செய்திசைந்து
விவாகஞ்சத்குலத்திற்செய்தருளிமேலும்
பெருமாள்கோயினிலேவாழ்ந்திருக்குநாளப்
புள்ளாராம்வாதிஹம்ஸாம்புதாசார்யர்தாம்
கருடமந்த்ரம்விதிமுறையாய்விண்டுசொல்லக்
கண்டிட்டாருபதேசங்கொண்டிட்டாரே.

இராகம்-காம்போதி-,தாளம்-சாப்பு.

கண்ணிகள்.

மேதினிதனிலெங்கும்-புகழஅவதரித்த
வேதாந்தகுரு ஆத்ம யோக-ருக்கே
மாதுலருமாகி-யாசாரியருமான
வாதிஹம்ஸாம்பு வாகர்
திருத்தந்தையாகிய-பதுமநாபர்தமக்குத்
திருவாய்மலர்ச்சிசெய்த பொருளே-எல்லாத்
திருத்தியருளியாச்சான்-சாம்ப்ரதாயங்களெல்லாந்
திருவுள்ளம்பற்றிட அருளே
தெரிசனப்ரவர்த்தக-ராகும்படிகடாக்ஷஞ்
செய்யக்கொண்டாரேகவி வாதி-சிங்கர்
பெருமாள்கோபில்தனி-லெழுந்தருளியிருந்த
ப்ரபலஞ்சொல்லுவரெங்குங் க்யாதி
பகர்பேருளாளரை-மங்களாசாஸனம்
பண்ணிக்கொண்டங்குள்ள பேர்க்கு-எல்லாம்
ஸகலசாஸ்திரங்களையும்-பிரவசனம்பண்ணிக்கொண்டு
தாமேயிருந்துமுறை வார்க்கு
ஆசாரியர்ப்ரஸாதித்த கருடவுபாஸனையை
யனுஷ்டிக்கவேண்டியுள்ள மதிலே-யெண்ணித்
தேசாதேசம்புகழுஞ்-செழுநதிவயல்புகுர்
திருவஹீந்திரபுர மதிலே
கடுகியெழுந்தருளி-நிகமாந்ததேசிகருங்
கருடநதியிலேநீ ராடி-யங்கே
அடியவர்க்குமெய்யனு-கியதெய்வநாயகனை
அணிமங்களாசாசன நீடி
ஏகாந்தஸ்தலமான-அவுஷதாத்ரிமேலே
யேறியருளியந்தத் தடத்தே-இரண்யன்
தேகமதைப்பிளந்த-அழகியசிங்கர்சன்னி
தியிலேயரசினிழ விடத்தே
அசையா மனத்தராகிக்-கருடமந்திரத்தையே
அனுசந்தித்துக்கொண்டிருந் தாரே-யரு
ளிசைந்துபெரியதிரு-வடியினாங்கே
யெழுந்துப்ரச்சன்னராய்வந் தாரே.

விருத்தம்.

தோதாநாயகிபாலர்திருமுன்பாகத்
தோன்றியேபெரியதிருவடியினாரும்

வேதாந்தஸித்தாந்தப்ரவர்த்தகந்தான்
விளங்குமிராமாநுஜன்றன்தரிசனத்தை
யேதானேவளர்த்திடவேவேண்டியிங்கே
யிவருக்கேஹயக்ரீவமந்திரத்தை
ஸாதாரணமதாகவுபதேசம்ப்ர
ஸாதித்தார்மூர்த்தியையுஞ்சாதித்தாரே.

தரு. இராகம்-அடாணா-தாளம்-ஆதி.

பல்லவி,

கண்டாவதாரருக்கே தொண்டானபேரைக்கண்ணுற்
கண்டாலும்வாணிவிலாஸ முண்டாகுமே.

அநுபல்லவி.

கொண்டாடிவைநதேயர் விண்டாரந்தமந்த்ரத்தைக்
கொண்டார்தாமுருவேற்றிக் கண்டாரயக்கிரீவரைக்
குதிரைமுகமுடனே யெதிரேவரவுமாக
மதனிலிசைபெருகு மதுரஅமுதையுண்டு (கண்)

சரணங்கள்.

பன்னுகலைதால்வேதப்பொருளை யெல்லாமென்று
பரிமுகமாயருளியஎம்பரமன் சாண்பனென்றுந்
சொன்னவகையேஸகலகலாதி தெய்வமென்றுந்
துதிமிகவேசெய்திடவம்பிர லக்னமாகிநின்றும்
பின்னும்வெள்ளைமுகத்தின் மன்னும்லாலாரூபமா
மென்னுமமுதமது தன்னைக்கொடுக்கவுண்டு
பெரியதிருவடிக ளருளாபிதுவெனவே
பெருகுகவிமழைகள் சொரியநினைவுகொண்டு (கண்)
வெள்ளைப்பரிமுகர்மீதில் துதியானதுரைத்து
விளங்கும்வைநதேயர்மீதிற் றுதியுமைந்துபத்துத்
தெள்ளியநகர்த்திருவஹீந்திர புரத்துத்
தெய்வநாயகரருள்செயவங்கே யைந்துபத்து
விள்ளுவார்பலபொரு ளுள்ளும்பிராகிருதபாஷைக்
குள்ளச்சுதசதகந் தெள்ளுமும்மணிக்கோவை
வெகுவிதகலையின திகளுமிசையவொரு
முகமதெனவருமத் தகைமையவர்தெரிய (கண்)
ஊஞ்சற்றிருநாளினி லூஞ்சற்பாட்டுப்பாடி
ஒருநாட்பெருமாள்பிராட்டி தமக்கம்மானைநாடி

வாஞ்சையுடனேயிருவர் களுக்குங்கழற்கோடி
வரிசைபந்துப்பாட்டேசல் வகைகளெல்லாஞ்சூடி
ஆஞ்சநவரத்தினமாலை தாஞ்சொன்னதிவையொன்பது
வாம்ஜகபிரவஸித்தமான லாஞ்சனந்தேவநாயகர்
அவர்திருவடிதனி லிவருமுரைசெய்தது
கவிகளிவரைங்க ரிவரேகுருதிலகர் (கண்)

விருத்தம்.

அங்குபதினெட்டுமதத்தருந்தர்க்கிக்க
அவர்களுடன்தர்க்கித்துச்செயித்துவாதி
பங்கமுறவேமணிப்பிரவாளமாகப்
பரமதபங்கமதொன்றையருளிச்செய்து
மங்கலஞ்சேர்சக்ரவர்த்தித்திருமகன்மேன்
மகாவீரகத்தியநூலருளிச்செய்து
துங்கவரைக்குடையெடுத்தகோபாலன்மேற்
சொல்லினரிருபதுமேற்சொல்லினரே.

இதுவுமது.

பத்தியதிசதுராராயிருக்குநாளிற்
பரவாதியர்களாலேயேவப்பட்ட
கொத்தனவன்மாளிகையின்வாசல்வந்து
குறுகியுமக்கேஸகலதந்திரங்கள்
உற்றுவருமேகிணறுகட்டுமென்று
வுரைசெய்யக்கிணறுகட்டியவனைவென்றார்
துத்தியஞ்செய்தெல்லாரும்பணியவந்த
தூயனர்வேதாந்ததாயனரே.

தரு-இராகம்-பந்துவராளி-தாளம்-ஆதி.

பல்லவி.

சறுவதந்திரச்சுதந்திர ரென்றாரே-கி
ணறுகட்டிக்கொத்தனையும்வென்றாரே

அநுபல்லவி.

உறுதியுடன்கருடனயக்கிரீவருபாசனை
திறமைவேதாந்தகுருதிருவஹீந்திரபுரத்தில் (சருவ)

சரணங்கள்.

கொத்தனானவனுமொருத்தன்பரவாதிக
ளொத்தியனுப்பவந்தெதிர்த்துவிருதுபேச (சருவ)

கணகணவெனவொலி மணியேயவதாரஞ்செய்
துணர்வுமிகுந்தவரைக் கிணறுகட்டுவீரென்றான் (சருவ)
நல்லகல்லுகள்கொடுத் தெல்லையுடனேகட்டச்
சொல்லவன்கிணறு வில்லுவளைதலாக (சருவ)
கோணற்கல்லுப்பொறுக்கி யூணிக்கொத்தன்கொடுக்கக்
காணும்வேதாந்தகுரு பாணிகொண்டுதிருத்தி (சருவ)
நீதியறியாப்பர வாதிசொற்கொண்டுவந்தேன்
பேதைமைதவிர்த்தாளும் வாதிசிங்கரேயென்றான். (சருவ)

வெண்பா.

கொத்தனைவென் றெங்கள் குருவேதாந் தாரியரும்
வித்தையத னாலெங்கு மேன்மையராய்ச்-சுற்றித்
திருக்கோவ லூர்கச்சி சேர்ந்து வளருந்
திருப்பதியும் வந்திப்பதே.

தரு-இராகம்-உசேனி-தாளம்-ஆதி

பல்லவி.

தூப்புற்பிள்ளைவைபவமென்னசொல்லுவேன்—எங்கள்
தோதாரம்மனுமேதானேதருந்
தூப்பிற்பிள்ளைவைபவமென்னசொல்லுவேன்.

அனுபல்லவி.

வாய்ப்பதாந்திருக் கோவலூரிலே
வந்துமாயனைத் திருவடிதொழச்
சேர்ப்பவங்கவர் விஷயமாகவே
தேகளீசஸ்துதி யையுஞ்செய்தருள் (தூப்)

சரணங்கள்.

பெருமாள்கோவிலை நாடியே—எங்கள்
பேரருளாளரைப் பாடியே
ஒருபஞ்சாசத்துச் சூடியே—இன்ன
முள்ளமீதன்பு நீடியே
திருச்சின்னமாலை சாத்தியே
தினசரிதைசொன் னேர்த்தியே
திருமண்காப்பிலனு சந்திக்கவே
திருத்துவாதசநாமப் பாட்டுஞ்
சரணியனிடத்திற் பண்ணிநல்ல
சரணாகதிமாலை நாட்டுந் (தூப்)

| | |
|---|---|
| அர்த்தபஞ்சக | சங்க்ரஹ—மின்னம் |
| அத்திகிரிமாகாத் | மியகம் |
| இத்தனைபிரபந் | தஞ்சகங்—களில் |
| இசையுமஷ்டபு | ஜாஷ்டகம் |
| வைத்தேயாசாரி | மேற்பதி |
| வாகானகாமாவி | காஸ்துதி |
| மெத்தசொன்னவண்ணஞ் | செய்தபெருமாள்மேல் |
| வேகாசேதுஸ்துதியையுங் | காட்டினர் |
| உத்தமவிளக்கொளி | யெம்பெருமான்மீதி |
| லுஞ்சரணகதி | மாலையைச்சூட்டினர் (தூப்) |
| புல்லும்புட்குழிப்பே | ரற்றதே—ரண |
| புங்கவர்மீதினிழல் | சாய்த்ததே |
| வல்லோர்மனதன்புக் | கேற்றதே—பர |
| மார்த்தத்துதியையும் | பார்த்ததே |
| நல்லவிச்வாமித்திர | கோத்ரா |
| ராமாநுஜதயா | பாத்ரா |
| செல்லுமொருகாலப் | பெரியோர்களுக்கங்கே |
| சீதச்சுரம்வந்து | வாதிப்பதுந்தீர்க்கச் |
| சொல்லும்படிதிரு | வாழியாழ்வான்மீதிற் |
| சோடசாயுதத் | துதியையுஞ்செய்தருள் (தூப்) |

## விருத்தம்.

கரதலாமலகம்போல்வேதாந்தத்தைக்
கரைகண்டகண்டாவதாரர்நாளும்
நிரதராய்க்கச்சியைச்சூழ்திவ்யதேச
நிலையெல்லாஞ்சேவித்துநிதமுந்தாமே
விரதராய்ப்பேரருளாளரையுமின்னம்
வெண்பரிமுகத்தரையுமாராதித்தே
வரதர்திருவடிச்செந்தாமரையைவாழ்த்தி
வந்திப்பார்திருமலையைச்சிந்திப்பாரே.

## இராகம்-சாவேரி-தாளம்-ரூபகம்.

### கண்ணிகள்.

க. திருவேங்கடமுடையானைத்
திருவடித்தொழ நாடித்
திருவுள்ளமாய்ப்-பயணங்கொண்டு
சென்றேயன்பு நீடி

உ. வண்டுவிளங்கு-நறுநீள்சோலை
வண்பூங்கடிகை யென்றே
கொண்டதாங்கடிகை-மலைதன்னைக்
குணமாயேறி நின்றே

௩. மிக்கானையென்-றனுசந்தித்து
மேநாரசிங் கனுமாங்
தக்கானைத்-திருவடிபணி
தலைக்கொண்டவன் பனுமாம்

௪. கடிகாத்துதி-யருளிச்செய்து
கண்டும்மங்கே தீர்த்த
சடகோபனை-முதலாம்வரி
சைகளைப்பெற்று மேற்ற

௫. அனுமப்புரத்-தினிலேயெழுந்
தருளிப்பத்தோ சிதரை
மனதாய்மங்க-ளாசாஸன
வரிசைசெய்தற் புதரை

௬. ஸ்வர்ணமுகி-நதியைக்கிட்டித்
தொடுத்தங்ஙனே பணிந்து
அவகாகித்தருளி-யூர்த்துவபுண்
டராதிகளை யணிந்து

௭. திருமலையை-நோக்கியங்கே
சிந்தைசெய்கு வாரே
திருமாதும-ணாளாவென்றே
திருவாய்மலர் வாரே

௮. கண்ணனடி-யிணையெமக்குக்
காட்டும்வெற்பன் றெடுத்துப்
பண்ணேடிசை-திருவாய்மொழிப்
பனுவலதைத் தொடுத்து

௯. ஆழ்வார்தீர்த்த-மதிலெழுந்
தருளிநீராடி யேத்தி
வாழ்வார்கேச-வாதிதிருநா
மங்களையுஞ் சாற்றி

௰. தருணங்கண்-டாழ்வாரைமங்களா
சாஸனஞ்செய் தருளித்
திருமலையடி-வாரத்திலெங்கள்
தேசிகரெழுந் தருளித்

௰௧. திருப்பதியே-யெழுந்தருளிச்
சித்ரகூடத்தின் செல்வர்
விருப்பாய்மங்க-ளாசாஸனம்
வேண்டியிசை சொல்வர்

௰௨. கூட்டமாகிய-தொண்டர்களுடன்
கூடிமலை மீது
காட்டழகிய-சிங்கர்ஸேவையுங்
கண்டாரே யப்போது

## விருத்தம்.

வேங்கடேசதேசிகரிப்படியேதானே
வேங்கடாத்திரிமீதிலேறிச்சென்று
தாங்குதிவ்யநகரத்தைச்சேவித்தானந்
தநிலயமாந்திவ்யவிமானத்தைச்சேவித்
தோங்கியவைகுந்தர்திருவாசல்சேவித்
துறுவவாவறச்சூழ்ந்தான்வாசல்சென்று
பாங்குடனேசாஷ்டாங்கவந்தனந்தான்
பண்ணினார்கோனேரிநண்ணினாரே.

## இதுவுமது.

பணிந்துதிருக்கோனேரிதனினீராடிப்
பன்னிரண்டுதிருநாமமணிவடங்கள்
அணிந்தருளிச்சொலிக்கின்றவடிவாய்க்கொண்டு
அருள்ஞானப்பிரானுடனேவராகர்தம்மை
வணங்கியேவலமாகக்கோயில்மீத
வாவறச்சூழ்ந்தான்வாசல்வழியாய்ச்சென்று
தணிந்துதிருப்புளியாழ்வாரையுஞ்சேவித்த
சாந்தர்தாமுபயவேதாந்தர்தாமே.

## தரு-இராகம்-சாவேரி-தாளம்-ஆதி.

### பல்லவி.

தேசிகன்றிருவடி மறவாரே - இந்தச்
செகத்தில்மறுபிறவிபிறவாரே.

### அனுபல்லவி.

காசினிபுகழ்வேங்க டாசலபதிதிருக்
கண்டாமணியவதாரங்-கொண்டாரெங்கணிகமாந்த (தேசி)

## சரணங்கள்

பரிவாந்திருமலைமேற்-கோயிலதனிற்சென்று
    பலிபீடஞ்செண்பகப்பிரா — காரம்
வரிசையுடன்வலஞ்செய்-தாஸ்தானமண்டபத்தை
    வணங்கித்தண்டுலங்கள்சம் — பாரம்
திரவியசாலைகளைச் சேவித்துமேவடக்குத்
    திருமடப்பளிமேவு — வாரங்
கரசிகளானநாச்சி-யாரைப்பணிந்துகொண்டே
    யமுனைத்துறைவறையும் — சேவித்தவேதசாரம் (தேசி)
ஸ்வாமிபுஷ்கரணியை-வலமாகவந்துஜோதி
    சொர்ணமண்டபத்தையுங் — கடந்தார்
அவாறழகியமண-வாளன்மண்டபத்துங்கே
    அஞ்சலித்துஞ்செண்பக — நடந்தார்
அவாமிருந்துதெண்டன்-சமர்ப்பித்துள்ளேயெழுந்
    தருளிமடப்பளிமேற் — றொடர்ந்தார்
இவாறேநாச்சிமாரையுந்-திருவடிபணிந்துகந்
    தியாகசாலையைவந்தித் — தெழுந்தாரன்புபடர்ந்தார் (தேசி)
அணிதிவ்யவிமானத்து-நம்பெருமாளென்னு
    மானந்தநிலயனைப் — போற்றி
மணிமண்டபமுதலா-மாஸ்தானமண்டப
    வரிசைப்பிராகாரங்களை — யேத்திப்
பணிகொண்டுங்கண்ணாலே-யாரப்பருகியனு
    பவித்துஞ்சேனாநாதனை — வாழ்த்தி
மணியுருவாகிவந்தார்-பின்னும்பாஷ்யகாரரை
    வணங்கியவர்தம்மனு — மதிபெற்றதிவ்யமூர்த்தி (தேசி)
வேங்கடாத்திரிதிருச்-சேவடிதலைக்கொண்டு
    வென்றுமாலையிட்டானிற் — சென்றார்
தீங்கில்லாதெதிர்நிலைக்-கண்ணாடிபோற்பெரிய
    திருவடிநயினாரைப்பரவு — கின்றார்
ஓங்குந்துவாரபாலர்-சக்ரவர்த்தித் திருமக
    னுடனிவர்களையெல்லாம்பணி — கின்றார்
நீங்காதவன்பினாலே-யானந்தவெள்ளந்தானே
    நிறைந்தலர்மேன்மங்கை — நாயகர்முன்னேநின்றார் (தேசி)

## விருத்தம்,

படியாய்க்கிடந்துன்பவளவாய்
    காண்பேனென்னும்படியேதானே

அடியேனென்றேகுலசேகரன்படி
யருகினின்றகலுகில்லேனென்
றிடுபாட்டையனுசந்தித்தெம்பெருமானே
யாராவமுதேயென்றே
அடிதொடுத்துமுடிவரைக்குந்
தரிசனஞ்செய்தார் வேதாந்தாசாரியர்தாமே.

## தரு-இராகம்-புன்னாகவராளி-தாளம்-ரூபகம்.

### பல்லவி.

தேசிகனே தூப்பில்வருந் திருவேங்கடத்தானே - எங்கள்
தெரிசனத்தைநிலைநிறுத்தச்செகத்தினில்வந்தானே

### அநுபல்லவி.

பாசமதுபோலவருந் பரமதங்கள்பங்கஞ்செய்து
காசியினிலெங்குஞ்சொல்லுங்கவிதார்க்கிகசிங்கம்ஆன (தேசி)

### சரணங்கள்.

தாமரையடியிணைகட்கேற்ற
தண்டைசதங்கை சேர்த்தியுங்
கோமளமுழந்தாடிருத்தொடை
கொண்டவரையி னேர்த்தியுந்
தாமதின்மேலேபீதாம்பரத்தைத்
தகதகவெனச் சாத்தியும்
அபிராமமாயிசைந்தருளும்வேங்கட
நாயகர்தம்மைப் போற்றியுங்கண்ட (தேசி)
அலர்மேன்மங்கையுங்கண்டலங்காரை
யணிவியாக்கிரநகத் திறங்களும்
நலமிகுந்திடுங்கர்ணசரியும்
நான்குதோளுங் கரங்களும்
பலவிதமானமணிகடகத்தின்
பாங்குந்தோள்வளை யுரங்களுஞ்
சொலுந்திருவாழி திருச்சங்குகளுந்
துலங்குமனே காங்களுங்கண்ட (தேசி)
மந்தகாசத்துடன்கூடிய
வளவதராமு நீள்தொடி
கந்தமுங்கிருபாகடாக்ஷங்களுங்
கபோலஙங்களுங் கண்ணடி

இந்துப்பிறையினெற்றியுமதி
விசைமுத்துநாம | மைவடிக்
குந்தளச்சுட்டிவரிசையுந்திருக்
கோரம்பச்சேவை | யிப்படிக்கண்ட (தேசி)
மகரகுண்டலந்தொடுசெவிப்பூ
வாய்த்திடுமபி | ஷேகமும்
வகைகண்டேதிருவடிமுதன்முடி
வரைக்குஞ்சேவிக்கும் | யோகமும்
புகர்வர்மீளருமுடிதிருவடிப்
பரியந்தத்தின் | வைபோகமும்
பகவனெம்பெருமானென்றேயனு
பவசனித்தப்ரதி | யேகமுங்கண்ட (தேசி)

விருத்தம்,

ததிபரத்துவஸவுலப்பியகாரணத்துவ
ஸ்வாமித்துவஸார்வஞ்ஞஸர்வஸக்தித்
வதிரக்ஷாவாத்ஸலியசௌசீல்யாதி
யனந்தகல்யாணகுணமிருக்கவேதம்
மதிவிளங்கிக்காருண்யமாகிநின்ற
மகாகுணத்திலீடுகொண்டுவேங்கடாத்திரி
பதிதயாவிஷயமொருசதகஞ்செய்து
பாவினர்தூப்புனகர்வாவினரே.

இதுவுமது.

தசகமொருபத்தெனவேவிளங்குகின்ற
தயாசதகந்தலைக்கட்டப்பணிதல்கொண்டு
மிசைதிருவேங்கடமுடையான்கடாக்ஷஞ்செய்து
மெமதுகிருஷிபலன்பலித்ததென்றேயெட்டுத்
திசைபுகழ்வேதாந்தாசாரியராயிங்கே
தெரிசனப்பிரவர்த்தகராம்படியேசெய்தார்
அசையாதுதிருமலைமேல்வீற்றிருப்ப
ஆக்கினர்கலிதோஷம் போக்கினரே.

த்ரு-இராகம்-ஆநந்தபைரவி-தாளம்-ஆதி.

பல்லவி.

பாதாரவிந்த வந்தனந்தானென்றன்
பலமேபுண்ணியபலமே.

### அனுபல்லவி.

தோதாரம்மனைப்பெற்ற மாதாவாகவிசைந்து
மேதானவதரி வேதாந்ததேசிகன் (பாதா)

### சரணங்கள்.

தடமலைமீதிலங்குள்ளவர்க்குப்பொரு ளோதி-எழுந்தருளியிருந்து
ஸர்வதந்திரஸ்வாதந்திரஸ்வாமிவெகு கியாதி
வடதிசைமதுரைசாளக்கிராம மாதி-யாந்திவ்யதேசங்களின்
வரிசைதரிசனமேதிருவுள்ளமாய் வந்தரீதி (பாதா)
கூடப்படித்தவித்தியாரணியருஞ்ஸன்னியாஸியாகித்தீர்த்த - யாத்திரைக்
கூடிப்புக்கராயப்பட்டணம்பெருமாள்கோயில்காத்த [காகவே
நாடுக்கரசன்பண்ணினபிரமரக்ஷஸைதீரப்பார்த்த-வித்தியாரணியரைவிட்டு
நடந்துபிருந்தாவனங்கோவர்த்தனஞ்செல்லவேற்ற (பாதா)
திருவாய்ப்பாடிமுதலாந்திவ்யதேசங்களுமயோத்தி - திருப்பிருதிகண்டம்
சேர்ந்தகடிகைநகர்நைமிசாரண்யமதை யேத்தித் [என்னுஞ்
திருத்துவாரகையின்மங்களாசாஸனஞ் சாத்திக்-காசிக்கெழுந்தருளி
ஜெயவிஷ்ணுபதிதன்னிலவகாகித்ததேசிகமூர்த்தி (பாதா)

### விருத்தம்.

திருப்புருஷோத்தமத்திலெழுந்தருளியங்கே
சேவித்துமெதீந்திராம்பாஷ்யகாரர்
திருத்தியருள்கூர்மமுதலாந்தலங்கள்
சிங்காத்திரிபீடமஹோபிலமதெங்குங்
கருத்துடனேயெம்பெருமான்களைவணங்கிக்
கண்டுதிருவேங்கடத்தைத்தொழுதுபோந்து
திருக்கறுமவ்வெவ்வுளூரைப்பணிந்த
சீலர்தாம்தோதைபெற்றபாலர்தாமே.

### இதுவுமது.

பூசிகர்தான்றிருநின்றவூர்பணிந்து
புகழ்வல்லிக்கேணிநீர்மலைவிடந்தை
ஆசில்திருக்கடன்மல்லைதொழுதுகொண்டே
அணிபெரும்பூதூரிலெதீந்திரரையேத்திக்
காசிமுதலாகியநன்னகரியெல்லாங்
கார்மேனியருளாளர்கச்சிக்கொவ்வாப்
பாசுரத்தையனுசந்தித்திசைந்தகாஞ்சிப்
பதிசென்றூர்வேதாந்தநிதியென்றூரே.

## தரு-இராகம்-சுருட்டி-தாளம்-ஆதி.

**பல்லவி.**

ஆராலறியலாஞ் சீரார் தூப்புலவதாரதேசிகர்வைபவமே.

**அனுபல்லவி.**

நாராயணர்கச்சிப் பேரருளாளரை
நேராயனுதின மாராதனைசெய்த (ஆரா)

**சரணங்கள்.**

மாயாவாதிசன்னியாசி வாதத்தில் வல்லமைபேசி
வாயாமலேசல்லியமோசி வந்துகுளத்தில்வாரிராசி
வற்றவுறுஞ்சியு மத்தையிவரின்வ
யிற்றுநிரம்பவும் வைத்தததுகண்டது (ஆரா)

வயிறுனதுப்பல்மீற மந்திரமீதென்றுதேறக்
கையினலொருதூணைக்கீறக் கண்டுவிடவேஜலமுமாறக்
கருவமடங்கியே மறுபடியுமிவர்
கிருபைபெறுமவ னுறுதிசெய்வைத்த (ஆரா)

ராமானுஜஸித்தாந்த ராமுபயவேதாந்த
சீமானுமானசாந்த ஸ்ரீவேங்கடாத்திரிக்காந்தத்
திருவனந்தசூரி தருசுதமணியாய்
வருபெறுமையுள்ள குருதிலகர்தம்மை (ஆரா)

**விருத்தம்.**

வருவிஜயநகரமதுதனிலேராஜ
வல்லபர்பாலிருக்கும்வித்யாரணியனன்பு
பரிபாலியஸ்னேகிதத்தாலிவருமிங்கு
பாதானவிருத்தியின்வைபவத்தைக்கேட்டி
வரிடத்தேராஜனைக்கொண்டுபகரிக்க
வரவழைக்கவேண்டுவென்றுமனத்திலெண்ணி
ஒருதாமிரண்டுதாமுப்ரகார
மொப்பந்தானெழுதினன்விண்ணப்பந்தானே.

**இதுவுமது.**

இப்படியேதேவரீரிவளவாக
வெழுந்தருளினீராகில்ராசனைக்கொண்
டப்படியேதேவரீர்க்கடிமையாகி
யதிகமாம்பிரயோஜனங்கள்தானேசெய்து
வைப்பனென்றேயிட்டுவந்தவிண்ணப்பத்தை
வாசித்துக்கொண்டதனிற்சுலோகமாக
முப்பிரகாரம்மாறுசுலோகமிட்ட
மூர்த்திதான்வைராக்யமூர்த்திதானே.

## தரு-இராகம்-கல்யாணி-தாளம்-ஆதி.

பல்லவி.

ஜகத்திலேவைராக்யமிகுந்த தேசிகருக்கு நிகராரையா.

அனுபல்லவி.

யுகத்திலேகலிக்குப் புதுமையாக
வுண்டானவரெங்கள் கண்டாவதாரரே (ஜக)

சரணங்கள்.

குவலயத்தில் வெகுகோடியிலேயொரு
கோடியில்நூறுபங்கி லொருபங்கு
கவலைகொண்டுபரிபாலனஞ்செய்துவரு
கலையிருக்கிறதென்று மிகவுங்க
ருவம்மடைந்துவருந்தேசராஜர்களி
னுறுதிவெகுமதியெண் ணலையங்கு
அவலிலேயொருபிடியையமுதுசெய்த
தாங்குசேலனைக்குபேர னாக்கிவிளங்கு
மந்தத்தேவனையே வந்திப்பேனென்றாரே (ஜக)
உஞ்சவிருத்தியிலும் பொறுக்குநெற்றண்டுல
முதரத்தின்பசியைத் தீராதா
கொஞ்சமோதெருவிற்கந்தைபொறுக்கித்தைத்துக்
கொண்டுகுளிருந்தீர்த்தா லேலாதா
பஞ்சமென்ன கானுங்குளத்திலொருசேரங்கை
பாணிதாகத்தைத்தீர்க்க நேராதா
வஞ்சமேமிகுந்ததேசராஜர்களின்
வாசல்சென்றுவிபுதர்கெஞ்சுவதே போராதா
மருளாதீர்களென்று பொருளானதுரைத்தார் (ஜக)
மனஞ்சலிகப்பிலாமற் நஷ்டப்பிரபுக்களுடை
வாசல்முகப்புத்திண்ணை தனிலொட்டி
யெனுமிருப்பதற்கோரஞ்சலிசெய்தேனென்று
யெங்குங்கீர்த்தியுள்ள துசங்கட்டிக்
கனம்பொருந்தும்நல்ல அஞ்சனமேனியாங்
கனகநிரபாயமென் பதையொட்டித்
தனஞ்சயன்றேரதிலலங்காரமாகிய
தனமேரென்னிடத்திலிருக்கிறதென் றதயீடிச்
சப்தார்த்தமெழுதி வித்யாரண்யக்கிட்டார். (ஜக)
தோயமேநிறைந்தவாரிதிமத்தியினிற்
ஜொலிக்கும்வடவாமுகாக் கினிபோலே
பாயுமுதரவனலெழும்பியென்னவென்று
பரவினுலுமிந்தப் புவிமேலே

சாயங்காலத்தில்மருமல்லிகைப்புஷ்பவா
சந்தருநமது வாக்கினாலே
ஆயுமோர்திரணத்தைக்கூடராஜரிட
மாசிக்கிறதில்லையாக்குமேன் மேலே
வயிராக்கமதுதானே சிலாக்கியமாகக்கொண்டார் (ஜக)
தேகமுள்ளவரைக்குமூடப்ரபுக்களைச்
சேவித்துச்சம்பா திக்குந்தனமே
சேகரமென்னவப்பைவிறகாய்க்கொண்டுதனஞ்
செயனையடக்குந்தனந் தந்தனமே
யோகமுள்ளதனஞ்செயனுக்குவர்த்தன
முயரவெடுத்த கோவனர்த்தனமே
யாருஞ்சாதனமபாதனந்தேவர்கட்கு
மாராதனமானதனமே யென்றனமே
யாமத்திகிரியில் பிதாமகண்வைத்தானென்றார்சகல (ஜக)

விருத்தம்,

செல்லுமுன்னாள்தமதுபிதாதானேசம்பா
தித்தகொன்றுந்தனதுசம்பாத்தியமதொன்று
மில்லையுண்டியானைமலைச்சிகரமீதே
யிருப்பதுபிதாமகன்சம்பந்தமான
நல்லதனமென்றெழுதிவிடவேவித்தியா
ரணியரிவர்வைராக்யாதிசயங்கண்டு
மெல்லடியிற்பிரவணராயிருந்தாரென்றும்
விள்ளுவாரெவர்களுமீதுள்ளுவாரே.

இதுவுமது.

ஆனந்ததீர்த்தியரொருவர்தம்பேர்
அக்ஷோப்யமுனியென்பார்கலைகள்வல்ல
தானந்தவித்யாரணியர்தர்க்கித்துத்
தத்வமஸிவாக்கியமதிற்கக்ஷியேற
எனந்தம்வேங்கடேசதேசிகன்ற
மியமெதுவோவதுதேசித்தாந்தமாமென்
றேநினைந்தங்கிருவர்கக்ஷிகளையுமோலை
தீட்டினாரிங்குவரக்காட்டினாரே.

வெண்பா

அக்ஷோப் பியமுநியா மானந்த தீர்த்தியர்
பக்ஷந் திருவுள்ளம் பற்றியே - தக்ஷணமே

சிக்ஷித்தே யவ்வித்தியாரணிய ரைமடக்குங்
கக்ஷி யொருசுலோ கம்.

தரு-இராகம்-தோடி-தாளம்-ஆதி.

பல்லவி.

ஆரியரெங்கள்வேதாந்தா சாரியார்போலே - சித்
தாந்தமார்செய்வார் பார்மேலே

அனுபல்லவி.

வாரிஜாக்ஷமுகுந்தர் - பேரிசைந்துகொண்டவ
தாரமதுவனந்த - சூரியபிள்ளையாய்வந்த (ஆரி)

சரணங்கள்.

தத்வமஸியாகிய வஸியாலே-இந்தத்
தாரணியிலக்ஷோப்பிய முனியுமேலே
வித்யாரண்யரையாரண் யம்போலே-கண்டு
வீசினரென்றுரே விளங்குவதர்நாலே (ஆரி)

பரமதநிரஸக ரிவராமே - இந்தப்
பாரிற்சுமதத்தா பனராமே
பெரியதிருவடி மந்த்ரமாமேன்-மையில்
பிரபலர்சந்நிதிகண்டால் வினையெல்லாந்தீர்ந்துபோமே (ஆரி)

கவிதார்க்கிகேஸரியெனும் பேரர் - எங்கள்
கமலநயநருக்கேதிருப் பேரர்
புவியிற்புகழுந்தாப்புலெனு மூரர் - தொண்டர்
புண்ணியஸ்வரூபமாகவந்தாண்டாவ தாரர்(ஆரி)

விருத்தம்.

வித்தியாரணியர்கக்ஷிதமக்குமங்கே
மேலாகவக்ஷோப்பியமுனியென்றேதான்
ஸித்தாந்தஞ்செய்தனுப்பியிருந்தாரந்நாள்
தென்னாடும் வடநாடுந்தொழவே நின்ற
பத்திசேர் திருவரங்கப்பதியிலுள்ள
பண்புகண்டு சகியாமற் சகலசாஸ்த்ர
வித்தாகவிருக்கும் பண்டிதனோர்வாது
விளைத்திட்டானங்கு வந்து முளைத்திட்டானே.

இதுவுமது.

நேரிட்டேனெனைச் செயித்துத் தரிசனத்தை
நிலைநிறுத்திக்கொள்வீர்களென்றானங்கே
பேரிட்டே தரிசனத்தரெவருங்கூடிப்
பேசிவிசாரித்திங்கே யெவருங்காணோ

மாரிட்டேயிவனைவெல்வோம் பண்டைநாட்பே
ரருளாளர்சந்நிதியினின்று வந்து
சீரிட்டவெம்பெருமானுரைப்போலுஞ்
சிங்கந்தான் கவிவாதிசிங்கந்தானே

தரு-இராகம்-உசேனி-தாளம்-ரூபகம்.

புல்லவி.

சிங்கமிருக்கிறபோது-நமக்-கிங்கிந்தயோசனையேது.

அனுபல்லவி.

தங்கங்கருணையாம் வங்கம் வேதாந்தப்ர
சங்கம்பரமத பங்கங்கவிவாதி (சிங்கம்)

சரணங்கள்.

வெண்ணெயிருக்கவுநெய்யை விரைந்துதேடுவானேன்
விளக்கிருக்கவக்கினியை வேண்டிக்கூடுவானேன்
கண்ணின்முன்னேகைப்புண்ணுக்குக் கண்ணாடிபோடுவானென்
காஞ்சீபுரமிருக்கநாம்சங்கைகள் படுவானேன்-அவர்
பண்ணுமதங்களைச்கண்ணூநா வுள்ளவர்
கண்ணுள்ளகர்த்தர்களெண்ணும்படி தாப்புற் (சிங்)
சாமியெம்பெருமானார்தாமே யவதாரங்
ஸர்வதந்திரஸ்வாதந்திரஸ்வாமிவேத ஸாரம்
பூமிமேலவர்மகிமையளவிடவேய பாரம்
புதஜனங்கள்திலகரிவர்புண்ணியவார வாரம்-அவர்
தாமேகமலாக்ஷ - ஸோமயாஜி பேரர்
மாமலையார்தம்கண் - டாமணி ரூபக (சிங்)
தர்க்கிகளாங்குன்றுகளைத்தகர்க்குஞ் சதகோடி
தலைமைராமானுஜசித்தாந்தமது நீடிக்
கற்கியுருவாசிவந்தார்கமலசரண் பாடிக்
கவிவாதியானைகட்குக்கண்டீரவ நாடித் - தொண்டர்
வர்க்கங்களின்முன்னேநிற்கும் கவலைத
விர்க்குஞ்சகலமுங்கற்குங் குருமணி (சிங்)

வெண்பா.

திருவரங்க மேவுந் தெரிசனத்த ரெல்லா
மொருமையா யோசனை செய்து—பெருமையாய்ச்
சாதனமொன் றேயெழுதத் தக்கவராந் தேசிகர்சீர்
பாதமே நாயடியேன் பற்று.

கோச்சகம்

பொங்கோதஞ்சூழ்ந்தவிந்தப்புவனியொடு விண்ணுலகு
மங்காதஞ்சேராமேயாள்கின்ற வெம்பெருமான்
செங்கோலுடைய பொன்னந்திருவரங்கற் செல்வர்வளர்
தங்கோயிற் சேனையர்கோன்சாதனமாயிட்டனரே

**விருத்தம்.**

திருவரங்கச்செல்வனார் தமது கோயிற்
சேனையர்கோன்சாதனத்தைக்கண்டே தூப்புல்
வருவரங்கம் புளகிதராய்ச்சிரமேலாக
வகித்தருளிவாதாருள்செய்துபண்டே
தருவரங்கைக்கொண்டு மெதீந்திரரைப் போலே
தாமுமெழுந்தருளிவந்தாரரங்கநோக்குந்
துருவரங்கந்தவளமிருநகவை யென்றுஞ்
சொல்லுவார்வினைகளெல்லாம் வெல்லுவாரே

தரு-இராகம்-சவுராஷ்டரம்-தாளம்-சாப்பு.

**பல்லவி.**

செங்கனகமதில் சூழ்ந்து செழிப்புமிகுந்தகோயிற்
திருவரங்கர்கண்வளரச்சேர்ந்தகோயிலே

**அநுபல்லவி.**

கங்கையிற்புனிதமாயகாவிரிநடுவுப்பாட்டுப்
பொங்குநீர்பரந்துபாயும் பூம்பொழிலரங்கர் கோயிற் (செங்)

**சரணங்கள்.**

ஆராதவருளமு தம்பொதிந்தகோயிலாம்
அம்புஜத்தோனயோத்திமன் னற்ளித்தகோயிலாம்
தோராததனிவீரன் றொழுதிசைந்தகோயிலாம்
துணையானவீஷணற்கே துணையானகோயிலாம் (செங்)
சேராதபயனெல்லாஞ் சேர்க்கின்றகோயிலாம்
செழுமறையின்முதலெழுத்தைச் சேர்ந்ததிருக்கோயிலாம்
தீராதவினையனைத்துந் தீர்க்குநல்லகோயிலாம்
திருவரங்கமெனவேதாந்த தேசிகன்சொல்கோயிலாம் (செங்)
பதின்மரானவாழ்வார்கள் பாடல்பெற்றகோயிலாம்
பாஷியக்காரர்முதலானோர் பரவுகின்றகோயிலாம்
மதிவிளங்குந்தேசிகனை வளர்த்தருளுங்கோயிலாம்
வணங்குந்தொண்டரியாவர்கட்கும் வாழ்வுதருங்கோயிலாம் (செங்)

சந்திரபுஷ்கரணியே தான்விளங்குங்கோயிலாம்
தாரணியின்மீதுவைகுந் தமிதென்னுங்கோயிலாம்
இந்திராதியாமிமையோ ரெவர்களும்பணிகோயிலாம்
எம்பெருமான்பூர்ணகலை யேவிளங்குங்கோயிலாம் (செங்)

## விருத்தம்.

செங்கமலநயனருறையரங்கமென்னுந்
திவ்யநகர்தனைநோக்கிவந்தனந்தான்
செங்கமலநயனர்தந்தவனந்தஸூரி
செல்வர்வேங்கடநாதாசார்யர்செய்தார்
அங்குள்ளசிஷ்யவர்க்கத்துடனேகூடி
யவனியெல்லாப்புகழவந்தாரமுதந்தானே
பொங்குவடதிருக்காவிரியையுள்ளன்பு
பூண்கின்றாரங்குவந்துகாண்கின்றாரே.

## இராகம்-சலியாணி-தாளம்-ஆதி.

### பல்லவி.

திருக்காவேரிகண்டின்னந் திருக்காவென்றுவேதாந்த
குருக்சானந்தரசமே பெருக்காகவுங்கொண்டதே.

### அனுபல்லவி.

மருக்கமழும்பூஞ்சோலை நெருக்கமிருபுறமு
மிருக்கத்தேமாங்கதலி வருக்கைமுதலாம்பல
விருக்ககன்கனி யாமதுகூடவே
யுருக்கருங்களி தேனுகள்பாடவே
யருக்கன்மூன்பனி போல்வினையோடவே
தருக்குமந்திர மாமுரையாடவே
திருக்குஇசைமன வருக்குமனதொடு
திருக்கண்வளரிட மருத்திரதையெனுந் (திருக்)

### சரணங்கள்.

ஆரங்கதிர்மணிய பாரங்களிருகரை
யோரங்களும்பரவி நீரங்கமலமாக
வாரங்கடோறுமேமந் தாரங்களண்டரிடு
காரங்கமேனித்திருச் சீரங்கநாயகரா
மணியரிநாரண மாலையே
பணிவதுமாகிய மாலையே (திருக்)
ஆவியே தேவியே பூவிரி காவிரி
காருயபாவலர் கூவியே சேவைசெய்
மூவர்கு வாவிய பூவுயர் மாவள

| | | |
|---|---|---|
| மேவியு மாவிகள் | சுவமி யாவையும் | |
| அமுதநிறைவுதரு | சமுகவிஜயநதி | |
| திமிதமுறுகடல்கள் | குழகுழுவெனவரு | (திருக்) |
| வையகமெங்குஞ்சொல்லுஞ் | சய்யபருவதத்தின் | |
| வமயமகத்தியராந் | துய்யதபோதனரின் | |
| சையின்கடத்தினின்று | செய்யும்பிரவாகினிநீ | |
| யையமில்லாதவளே | மெய்யன் கவேரன்பெண்ணே | |
| மகிதலமிகவிளை | சாலியே | |
| வைபவமுளகுண | சாலியே | (திருக்) |
| மந்தர முந்த | வெழுந்து கடைந்திடு | |
| நைந்திதர்ர்தமர | யுவந்து குளிர்ந்திட | |
| யிந்திர னுய்ந்திட | வந்தமு தந்தக | |
| வென்றன் முகுந்தன் | சிறந்து வளர்ந்திட | |
| வருமுத்தியைநிகர் | தரும்பிரபலமே | |
| சுருதிசொரிநலமே | கருணைபெருகிவரு | (திருக்) |
| சொன்னேர்தருமங்கட்கு | முன்னேயுரைப்பதுவு | |
| நின்னேயல்லாது இன்னம் | பின்னேது கொல்வதம்மா | |
| பொன்னே கொழிக்குநல்ல | மின்னேயெனுந்தெய்வப்ர | |
| சன்னேவுலகுயிருக் | கன்னேநதியரசே | |
| சுரநதியிலுயர்கலி | யாணியே | |
| துதிபரவுமிசைகலி | யாணியே | |
| துங்கதரங்க கரங்களி | லங்கவே | |
| சங்குமுழங்கிடவங்கு | நெருங்கிய | |
| குங்குமபங்கதனங்க | ளனுங்கன | |
| பங்கயசங்குமுதங்கள் | விளங்கிய | |
| சுலபமதனில் வருநலமே | சுகிர்தப்ர | |
| பலமேவெகுபுண்ணியதலமே | வியபெரிய | (திருக்) |

## கோயிற்கெழுந்தருளியது.

### விருத்தம்,

வரம்பிலாப்புகழ்சிறந்துவளமேயோங்கு
வடதிருக்காவிரியினீராட்டஞ்செய்து
கும்பனூருத்தமனைத்தொழுதுகொண்டே
கனகமயகோபுரஞ்சூழ்கோயில்கொண்டே
நிரம்பியவானந்தவெள்ளம் பெருகக்கொண்டு
நிறையவேயாராதவருளன்றேத்திப்

பரம்பியவங்குளவரெதிர்கொண்டுகாணப்
பரிசிப்பார் பொன்னரங்கந் தரிசிப்பாரே

தரு-இராகம்-நாதநாமக்ரியை-தாளம்-ஆதி

பல்லவி.

தெரிசனநிகமாந்ததேசின் செய்தார்
தென்னரங்கத்திற் றெரிசனம்

அனுபல்லவி

தெரிசனநிகமாந்த தேசிகபீடஞ்
செகத்திற்பவக்கடலுக் கொருவோடம்
பெரியதிருவடியின் மந்திரபாடம்
பிரபலர்திருவரங்கர் கருணைக்கோர்கூடந் (தெரிச)

சரணங்கள்.

ஆதிகேசவனைப் போற்றி
வேதவசனங்கள் சாற்றி
மேதினியெங்கெங்குங் கீர்த்தி
யோதுதாமோதர னேர்த்தி
யடுத்தகோபுரத்தை நாடியே-பணிந்துஞ்சூடிக்
கொடுத்தநாச்சியாரைப் பாடியே-மன்னனுரையுந்
தொடுத்தபெரியாழ்வாரைத் தேடியே-தொண்டரடிப்பொடியென்
றெடுத்தவாழ்வாரைக்கொண் டாடியே-பார்த்தசாரதியென்னு
மன்னவர்பொன்னடிமுன்னதமாய்ப்ப ணிசைந்து-பாஷ்யகாரர்தம்
சன்னதிதன்னதின் முன்னதாகப்புகுந்து-வந்தேதமியேனு
மென்னவேபன்னிய சொன்னயச்சுலோகம்பகர்ந்து-காதாதாவென்
றின்னவைவன்னனையென்னெதிமன்னர்க்குயாந்து-அனுசந்தித்தே
யரியதபோநிதிபுருஷகாரமாய்ப் பண்டு-தென்னரங்கத்திற்
பெரியபெருமாளைத்திருவடித்தொழுவராய்க்கொண்டு-கோபுரநைனுர்களை
வரிசையாய்க்கிட்டித்திருவாழியாழ்வாளைத்தொண்டு-செய்வோமென்றசு
தரிசனஷ்டசஞ்சமர்ப்பித்துத்துதிமிக விண்டு-வந்தனஞ்செய்தே
ஆரெங்கும்புகழே சொன்ன
சீரங்கநாச்சியார் முன்னன்
ரேரங்கநகரின் மன்ன
னரங்கருள்சேர்ப்ர சன்ன (தெரி)

எடுத்தகையழகியநைனுரை யன்பாலே
தொடுத்தங்கேதொழுதுமத்திரு வாசலாலே
அடுத்தபின்னுள்ளேபுகுந்தும் பாவாறே
திடத்துடன்வலமாக வந்ததின் மேலே

எடுத்தகையழகியனைநனுரை யன்பாலே
தொடுத்தங்கேதொழுதுமத்திரு வாசலாலே
அடுத்தபின்னுள்ளேபுகுந்தும் பரிவாலே
திடத்துடன்வலமாகவந்ததின் மேலே

யேற்றசந்திரபுஷ்கரணியிலே வேதி - யர்சிகாமணியிவர்
தீர்த்தஞ்சுவீகரித்திசைமந்த்ர மோதி - அக்கரையில் விளங்கிய
தீர்த்தரக்ஷகர்களானகுமு தாதி - களையுமின்னஞ்
சூத்திரகாரவேதவியாசபகவா னாதி - யிவர்களையும் வணங்கி
யேகிருஷ்ணபதரிகாசிரமவாசிநாராயண ரான - வைகுந்தநாதர்
பாகத்தினாழ்வார்கள்திருமழிசையார்முதல் ஞான - மிகுந்தவரை
யோகத்தினுடனிவர்திருவடிதொழுதுகொண்டே - நல்லருளைப்பெற்று
மேகத்தர்பெரியதிருவடியைநோக்கியங் கான - பிரணமஞ்செய்தன்
பிருக்கவேண்டியுமங்குநின்றுயர்திருக்கொட்டாரங் - தனிலேசென்று
பெருக்கமொங்குசெங்கமலநாச்சியாரை யங்நேரஞ் - சுற்றிக்கொண்டன்பு
பருக்குமுதலாழ்வாரையுந்துதிசெய்து நமஸ்காரங் - கைக்கொண்டுமன
துருக்கமாகவே வரிசைசெய்தார் பிரகாரம் - பரவாசுதேவனையு

மிலங்குதிருமங்கையாழ்வார் கோபுரஞ்சுற்றும்
துலங்கவேயாரியபட்டர்திரு வாசல்பெற்றும்
நலங்கோளணியரங்கர்திரு முற்றத்திலுற்றுங்
தலங்கள்புகழ்பாஷ்யகாரர் குறட்டைக்குறித்துங் (தெரி)

பலிபீடத்துக்குத்தெற்கே சாஷ்டாங்கவந்தனம்
நலியாமனத்திற்பத்தி சேர்ந்தாங்கிசைந்தனஞ்
சொலியேபிரதக்ஷணமாய்ப் பார்த்தாங்குயர்ந்தன
மலைநேர்கோபுரமதி லாஸ்தானபந்தனம்

பலபலமண்டபகோபுர நேர்த்தி - யைப்பணிந்தேதிருச்சுற்றி
யிலுள்ளஞானப்பிரானையுந்தச மூர்த்தி - லக்ஷ்மீநாராயணர்கள்
சொலுமிவர்களைமங்களாசாஸனஞ் சாத்தி - அயக்ரீவரைக்கிட்டி
நலப்பிரசித்துநிகமசதமென வேத்தி - இன்னமுந்திருமடப்
பள்ளியரவிந்த நாச்சியார்சங்கநிதிபத்ம நிதிமேலே - கூடப்பாண்டிய
வள்ளல்கோபுரத்தைக்கிட்டித்துவாரபாலரனுமதியாலே - உட்சென்று
[தூப்புற
பிள்ளைகிழக்கோலடிநடந்துதண்டன்சமர்ப் பித்துயர்நூலே - சொன்
[முறைகண்டு
விள்ளுவர்திருக்கருகூலநாச்சியாரைமிகு பரிவாலே - வணங்கித்திருமாலைப்
பலகையருகேதொண்டரடிப்பொடியாழ்வாரையுமுன்பு - பரவாசுதேவனை
[யும்
நலப்ரணவாகாரவேதசிருங்கவிமானத்தையும் பின்பு - விபீஷணாழ்வானை

வலமாகச்சேனுமுதலாழ்வானைத்தொழுததே யன்பு - உறையூர்நாச்சியா
தலமேவுகிருஷ்ணனையுஞ்சேவித்ததுவும்வெகுதென்பு-அழகியமணவாளன்

பருமண்டபத்திலே பாங்காகவேறித்
திருவணக்கந்திரு வாசன்மேற்றேறிப்
பெரியதிருவடிநை ஞர்துதிமீறி
வரிசைத்துவாரபாலர் ஜயவிஜயரைக்கூறித் (தெரி)

நயனத்தானந்த கருணாரசம்வைத்து
ஜயவிஜயர்களனு மதியுந்தான்பெற்று
வயனமாய்த்திரி வுடைமாளிகையுற்று
உயர்வுள்ளசேர்த்தியி லெழுந்தருளுங்கிரமத்து

நாபிநளினநாகசயனநர சிங்கர் - நாராயணர்களைச்சொல்
லாபமுடன்றெழுது திருமணற்றூணருகேயெங்க - ளனந்தாரியகுல
தீபர்விளங்கிநின்றேழையெய்திலேனெனவேதுலங்க -பாட்டனுசந்தனைப் [பிர
தாபமுடன்றிருவடிகளின்மிகுந்து வணங்க - அமலனுதிப்பிரானை
நாட்டியிப்படிப்பாதாதிகேசமாகவரங்கத்தம்மான்றிருக்க - மலபதமென்று
பாட்டுத்தொடங்கியாழ்வாரனுபவித்தார்போலிவரன்புபெருக்க - த்திருக் [கணைக்கால்களையும்
பூட்டுமுழந்தாடித்திருத்தொடையுந்தியுயர்மார்பு வலத்திருக்கை - ஆசானு லம்பியாகக்
கூட்டிமற்றதிருக்கையுமுகமண்டலமுமணிநெருக்க- ஆதிராச்சியசூசகமாம்
நல்லஅபிஷேகத்தையுந்தனித்தனியாகவனுபவித்தார்-பாதாம்போஜமென்
சொல்லியிசைவடமொழிதனிற்றுதிபரவவுற்பவித்தார் - வாசனுமௌலி
யெல்லையாகமீளவங்கேசேர்த்தனுபவித்துக்கைகுவித்தார் - பாயுமீரரங்கம்
வல்லவர்தொடுத்துப்பின்னுங்காந்தோதாரையென்னுங்கவித்தார் - அழகிய [மணவாளன்

அங்கநாதன்மேனியாசதிலக மென்றூர்க்கு
மங்கேசேர்த்தியிலனுபவித்த துண்டாக்கு
மெங்கள்தீவினையாகியபாவங்கள் போக்கும்
பொங்குபுண்ணியர்திருவுள்ளத்திற் றேக்குந் (தெரி)

## விருத்தம்.

மொய்த்துக்கண்பனிசோரவெனும்படிக்கே
முராரியெனுங்கோயில்வளர்முகுந்தன்சேவை
யுற்றுமிகப்புளகிதராய்க்கொண்டுமங்கே
யுன்னுவரையாதரவாயுகந்தேபார்வை
வைத்துநம்மிராமானுஜன்போலிந்த
மண்டலத்திலிருமெனமண்டபத்தில் வந்தார்

பத்திராலம்பனம் பண்ணினவன்வந்து
பார்க்கின்ருன் கக்ஷிசொல்லித் தோற்கின்ருனே.

தரு-இராகம்-ஆனந்தபைரவி-தாளம்-ஆதி.

பல்லவி.

ஆதிசிங்காருள்கவி - வாதிசிங்கர்மகிமையை - யாராகிலுமறிவாரா.

அனுபல்லவி.

மேதினிபுகழ்ந்தூப்புல் - மீதினில் வருந்திரு
வேங்கடநாதாரிய - ராங்கண்டாவதாரரே. (ஆதி)

சரணங்கள்.

நாற்றிசையிலும்புகழ் திருவரங்கத்திற்பண்டு
நாடிப்பத்திராலம்பனஞ் செய்தவன்வரக்கண்டு
கீர்த்திநெடிலாகாரங் குறிலென்றசொல்லைக்கொண்டு
கெலித்தேயிவர்கக்ஷியும் பலித்தேசெயித்ததுண்டு (ஆதி)
இதிவர்க்குமவனுக்கும் வெகுநாள்வாதமாய்த்தொந்த
மேவையுங்கண்டிதஞ்செய்து எழுதிவந்தாரேகிரந்தஞ்
சததூஷணியென்றும்பேர் தரித்தாரிந்தப்ரபந்தந்
தானேவிளங்குமது சகலர்க்குமேயானந்தம் (ஆதி)
நூறுகக்ஷியுஞ்சொல்லித் தோல்வியாகியேநின்று
நுணுக்கஞ்சொல்கிறேன் நீர்த்தமுமக்குபின்னெனக்கென்று
கூறுகாலத்திற்பரிக லங்கட்குப்பின்னேசென்று
கொண்டசேஷத்வத்தாலும் மக்கினஞ்செய்தாரேநன்று. (ஆதி)

விருத்தம்.

பத்திராலம்பனம் பண்ணிவந்த பண்டிதன் கண்டிதமடைந்து
பணிந்துபின்பேகஅரங்கநாயகரும் பரிவொடுபேர்தரக்கிருபை
வைத்துநீருபயவேதநூல்களையும் வியாக்கியானம்புரிந்திங்கே
வசியுமென்றதையேசிரமதாய்ப்பெரிய வாச்சான்பிள்ளையைமுத [லாய்ச்
சுற்றியசுருதப்பிரகாசிகாபட்டர் சுதரிசனுசார்யரிவர்கள்
துதிசெயநிகமாந்தப்பிரவசனந் தொடர்ந்திருந்தங்குளோர்புகழ
உற்றிடுவாதிபஞ்சானனனெனவே யுபயகாவேரிரங்கத்தி
லுபயர்காமுஞ்செயு பயநாமங்களுபயவேதாந்ததேசிகனே.

இதுவுமது.

திருவரங்கங்கோயில் வாழ்ந்திருந்தியவர் கெடி
செலுத்திவருகாலத்திலோர்

தினமிரவிலெதிவராருமிவர் சொப்பனத்திற்
சிறந்தெழுந்தருளிவந்து
திருவடியையிவர்சிரசில்வைத்துப்பதித்து நீர்
தெளிந்துநம்பாஷ்யமதனைச்
செகத்திற்பிரவர்த்திக்கை செய்தும்பிரபந்தங்கள்
திரளாகவுதவுமென்னக்
கருணைபெறவேகொண்டு திருவேணுதாரியிவர்
கண்ணனொரு வேணுவென்றே
கருத்தோத்தபத்தியாய்ச் சாரீரகத்தைவெளி
கண்டுதிருவோலக்கமேல்
தருகருணைபாடிடப் பெற்றுநமிராமாநு
ஜன்பாஷ்யந்தொடங்குஞ்
சருவப்பிரபந்தகுரு வுறுதியெங்குருசர்வ
தந்திரசுதந்திரகுரு.

இரகசியாதி கிரந்தங்கள் சாதித்தருளியது.

இதுவுமது.

நுவலுதிருவோலக்கந்தனிலே ராமா
நுஜபாஷ்யந்தொடங்கிப்பிரசங்கஞ்செய்த
இவரேவேதாந்தாசாரியராமென்று
மெம்பெருமானுகந்து திருப்பேரைச் சாற்றத்
தவருமற்சிரங்கநாச்சியாருஞ்
சர்வதந்த்ரசுதந்த்ரரென்றுசாற்றக்கொண்டு
குவலயத்திற்பரமதநிரசனமாகக்
கூட்டினர் பிரபந்தநிலைநாட்டினரே.

தரு-இராகம்-தோடி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

பரமதநிரசனபூர்வக சுவமதஸ்தாபனரே - வாதிபஞ்சானனரே.

அனுபல்லவி.

திருமங்கையாழ்வார்மீனே-டாமைகேழலெனுமதுபோல்
தசாவதாரத்துதியருள்-செய்யுபயவேதாந்ததேசிகர். (பர)

சரணங்கள்.

தத்துவமுத்தாகலாபம் சருவார்த்தசித்தியுந்
தகுநியாயசித்தாஞ்சன நியாயபரிசுத்தியுந்

தத்துவடீகையதிகரண சாராவலியாமுயர்த்தியுந்
தாத்பர்யசந்திரிகைவாதித்திரயகண்டனப்பிரசித்தியுஞ்செய்து (பர)
பூமித்துதிரீளாத்துதி யெதிராசசத்ததியும்
புகழ்சேசுவரமீமாஞ்சையெனவே சொலும்பத்ததியும்
மீமாம்ஸாபாதுகையும் நியாசதிலகமாநிதியும்
விளங்கவேயரிதினகிருத்தியகத்தியவியாக்கியானவிதியுஞ்செய்து (ப)
ஈசாவாசியோபநிடவியாக்கி யானரகசியரக்ஷை
யேற்குஞ்சத்சரித்திரரக்ஷையின்னம் நிக்ஷேபரக்ஷை
ஆசாரவிவத்தாபக மானபாஞ்சராத்திரரக்ஷை
ஆளவந்தார் செய்தருள்கீ தார்த்சங்க்ரகரக்ஷைசெய்து (பர)
பகருஞ்சதுஸ்லோகிவியாக்யானம் பண்பாமிவைதந்தார்
பாஷியகாரரவதாரமோ பட்டரோவெனவந்தார்
மிகவுங்கிருபைகூர்ந்து ரங்கநாயகருமுவந்தார்
மேலாந்தரிசனம்விளங்கவே யெழுந்தருளியிருந்தாரிவர் (பர)

## விருத்தம்.

தருபுகழ்வேதாந்தாசார்யராயிங்கே
சருவதந்திரசுவதந்திரபேர்தனியேபெற்று
வருகவிதார்க்கிகசிங்கவென்னுநாம
வைபவத்தையுடையவராய் வளருந்தூப்புல்
திருவேங்கடம்முடையானிவர்தாமந்தச்
சீரங்கநகரில் வாழ்ந்திருக்குநாளில்
வரிசைமிச்சிரதேசத்தினவர்கள்வந்து
வாதுதான்செய்தனரப்போதுதானே.

## கிருஷ்ணமிச்சிர டிண்டிம கவிகளை வாதில் வென்றது.

## இதுவுமது.

அண்டிவரும்வாதிகளைச் செயித்திருக்க
அதைக்கேட்டுக்கிர்ஷ்ணமிச்சிரனொருவன்வாதிற்
சண்டையிட்டுமவன் தோற்றுத்தன்பிரபோத
சந்திரோதயமெனுநாடகத்தைக்காட்டக்
கண்டிதஞ்செய்ததுக்குபதிலாகவேசங்
கல்பசூரியோதயஞ் செய்தவனைவென்றார்
டிண்டிமசாருவபௌமன்வாதினிற்ப
டிக்கின்றான்கக்ஷிசொல்லி வெட்கின்றானே.

### தரு-இராகம்-சங்கராபரணம்-தாளம்-ஆதி

பல்லவி.

தண்டாவதாரசுவாமியே - யிவர் மகிமையைக்
கண்டீர்களோ சனங்காள்.

அநுபல்லவி

டிண்டிமகவிகண்டங்களை டிண்டிமவாத்தியமாகக்
கொண்டருளிய கவிசரபகண்டபேரண்டப்பிரசண்ட (கண்டா)

சரணங்கள்.

மண்டலந்தனில்சுவ தாடியே - யாய்க்கவிவாதிகள்
மண்டிவருவரநேகங்கோடியே - அவர் கிரீடத்தில்
கொண்டமணியினுண்டாமொளி - அண்டிநிறைந்துபிரகாசமாம்
புண்டரீகப்பொற்பதமதில் - தெண்டஞ்செய்யத்தொண்டுகொண்ட (கண்)

பண்டிதன் ராகவாப்பியுதயமே - செய்தவன்காட்டக்
கண்டித்துயாதவாப்பியுதயமே - யிவராருளினூர்
குண்டலத்துறையண்டர்பணி -கொண்டல்வண்ணர்சாளக்கிராம
கண்டிகையணிசேஷகிரிவை - குண்டருடைய கண்டிரண்ட (கண்)

டிண்டிமென்றிரு ஸ்லோகங்கூறியே - அவன்றுடைகளில்
ரண்டினுமடிகொண்டு மீறியே - பணிந்திடும்படி.
கண்டனைசெய்தாரெண்டிசைபுகழ் - புண்டரீகாக்ஷர்தம்பேரர்
சண்டபானுவுமிவர்நேர்நவ - கண்டங்களிற்கண்டாருண்டோ (கண்)

### திவ்யதேசமங்களாசாஸனத்துக்கெழுந்தருளியது

கட்டளைக்கலித்துறை.

பதின்மர்தம்பாக்கொண்டருளியங்காவிரிப்பாங்கரங்கப்
பதியருள்கொண்டுநந்தூப்புல்வந்தார் தொண்டர்பாடிமனம்
பதிபதபங்கயவேதாந்ததேசிகர்பாங்குதிருப்
பதிகளின்மேற்சென்றுமங்களாசனம்பண்ணினரே.

### தரு-இராகம்-கேதாரகவுளம்-தாளம்-ஆதி.

பல்லவி.

தெரிசித்தாரையா - திருப்பதிகளையெல்லாம்
திருவேதாந்தகுருவே.

அநுபல்லவி.

திருக்கோட்டியூரிலென் னுருவிலரியையும்
திருமெய்த்திலின்ன முதவெள்ளத்தையும்
திருமாலிருஞ்சோலை தனிற்சுந்தரமாலையும்
திருமோகூர்க்காளமேகன் றிருவடியையும் (தெரி)

**சரணங்கள்.**

மல்லாண்டதிண்டோளனை மதுரைதனிலேகண்டு
மங்களாசாசனஞ்செய்தேத்தி
புல்லாணிதனிற்றெய்வச் சிலையாரைச்சேவித்துப்
புகழ்திருவணையாடிவாழ்த்தி (தெரி)

மீண்டுந்தண்காவிற்றிறல் வலியைக்கண்டு வணங்கி
வில்லிபுத்தூரில் வந்துசேர்ந்து
வேண்டிப்பெரியாழ்வாரைப் புருஷகாரமாய்க்கொண்டு
வியந்து மனது களிகூர்ந்து (தெரி)

கொண்டேவடபெருங் கோயிலுடையான்சூடிக்
கொடுத்தநாச்சியாரையும்பாடித்
தண்டமிழோர்கள் சொல்லுந் திருநகரியில்வந்து
சடகோபன்றனையே கொண்டாடி (தெரி)

நிரஞ்சனமயஞ்சனவென்னுஞ்சுலோகத்தாலே
நிறையுமன்பொடுநம்மாழ்வாரைப்
பொருந்தியடிபணிந்தேயவரை முன்னிட்டுக்கொண்டு
பொலிந்துநின்றபிரானெனென்பாரை (தெரி)

அங்குள்ளவிரட்டைத் திருப்பதியிதென்றுசொல்வ
தானதொலைவில்லிமங்கலந்தானே
பொங்கமிருந்துவளரர விந்தலோசனனைப்
புகழ்ந்துபணிந்து நலந்தானே (தெரி)

கலந்துதிருப்பேரையில் மகரநெடுங்குழைக்
காதனடிக்கேயன்புசார்த்திச்
சொலுந்திருப்புளிங்குடிக் காசினிவேந்தரையும்
தொழுததுவும் வெருநேர்த்தி (தெரி)

வரகுணமங்கையிலெம் மிடர்கடிவானையவ்
வைகுந்தத்திற்கள்ளப்பிரானைப்
பரவித்தென்குளந்தையில் மாயக்கூத்தனென்னும்
பாஞ்சசன்னியக்கரத்தானை (தெரி)

மாவளம்பெருகிய திருக்கோளூர்தனில்
வைத்தமாநிதியையுமீண்டு
சீவரமங்கைநகர் வானமாமலையும்
சேரப்பரவியருள்பூண்டு (தெரி)

வருகுறுங்குடியில் ஸ்ரீவைஷ்ணவநம்பியருள்
மருவித்திருவண்பரிசாரம்
திருவாழ்மார்பனுடன் வாட்டாற்றிலாழ்வானைச்
சிறந்துதொழுதுவேதசாரம் (தெரி)

திருவநந்தபுரத்தில்வளர் பதுமநாபனையுந்
திருவடிதொழுதங்கேநின்றும்
அருமையாகியமலை நாடேறவேயெழுந்
தருளிமனத்துட்கொண்டுசென்றும் (தெரி)
தென்காட்கரையின்மீதிலுரையுமென்னப்பனைநற்
றிருமூழிக்களத்தோன்சுடரென்றே
நின்கருணைதாவென் றேத்தித்திருப்புலியூர்
நின்றமாயப்பிரானையென்றே (தெரி)
திருச்சங்கனூரினிலமர்ந்தநாதனையத்
திருநாவாய்மாமணிவண்ணத்தோனைத்
திருவல்லவாழில்நின்றபிரானைத் திருவண்வண்டூர்
சேர்ந்தகனிவாய்ப்பெருமானைத் (தெரி)
கருதும்வித்துவக்கோட்டிற் களிறட்டானைமெய்த்
திருக்கடித்தானத்துமாயப்பிரானை
திருவாறன்விளையினந் தெய்வப்பிரானென்று
சேர்ந்துதலத்திலுறைவானை (தெரி)
நின்றிப்படியேதானே மலைநாடதனிற்சொல்லி
நிறைதிருப்பதியன்புகூர்ந்து
தென்றிருப்பதிகளு மலைநாட்டுப்பதிகளுஞ்
சிறந்துபணிந்தரங்கஞ்சேர்ந்து (தெரி)

வெண்பா.

ஆழமண்டவும்படாவாமடுவிலோலமிட்ட
வேழமண்டவுங்காவேசிதைந்து-வீழமண்ட
சூழமண்டவாழியனைத்துப்புலார்சேவிப்பர்
சோழமண்ட லந்தனில்வந்து.

தரு-இராகம்-சங்கராபரணம்-தாளம்-சாப்பு.

பல்லவி.

சேவித்தார்எங்கள்திருவேங்கடநாதாரியர்-சேவித்தார்.

அநுபல்லவி.

வாவிகூவநிறைந்தகாவிரிவளநாட்டில்
மேவுசோழமண்டலத்தேவர் திருப்பதியை (சேவி)

சரணங்கள்.

திருப்பேர்நகரிலப்பக் குடத்தானை - அம்பில்
சேர்ந்தநாகத்தணையாந் தடத்தானை - மிக
விருப்பமாங்கண்டியூரி னிடத்தானை - அங்கே
மிண்டியரசன் சாபந்தீர் திடத்தானை - யின்ன

மருப்பரவியதஞ்சைமாமணிக்கோயில்வளர்ந்
திருக்குமெனக்கரசை யென்றஞ்சையாளியையும் (சேவி)

வடகரைப்புள்ளம்பூதங்குடி கொண்டே வளர்
வல்வில்லிராமனடி யிணைகண்டே - பணிந்
தடைவுடனுதனூர் தனிற்பண்டே - படி
யாண்டளக்குமய்யர்க்கு வெகுதொண்டே - செய்து
தடமீதுவந்துகவித்தலத்திற்கண்ணனுக்கே
யன்பிடுவார்கூடலூர்க்காவிப்பெருநீர்வண்ணனைக்கண்டு (சேவி)

மணந்தரும்பொற்றாமரைப் படர்ந்தையே - செழு
மாமணிசேருந்திருக் குடந்தையே - மலர்
அணிந்தகோமளவல்லி மடந்தையே - வாழு
மன்பர்க்கேயிவராரு ளுடந்தையே - யென்று
தணிந்தேவணங்கியானந்தவெள்ளம்பெருகக்கொண்டு
பணிந்தாராராவமுதத்தைப்பருகியனுபவித்து (சேவி)

நந்திபுரவிண்ணகர நாதனைத் - திரு
நறையூர்நம்பியாம்வேதப் பாதனை - யருள்
தந்ததிருச்சேறையின் மீதனை - யெங்கள்
தண்சேறைவள்ளலாம்வி நோதனைப் - பணிந்
துந்திருவிண்ணகரிலும்பர்கள்தொழவரும்
அந்தவிண்ணகர்மேயவப்பனடியைக்கண்டுஞ் (சேவி)

கண்ணமங்கையிற்பத்த ராவியே - கண்டு
கண்ணுலாநந்தவாரி தூவியே - செய்ய
கண்ணன்மகிமையைக்கு லாவியே - திருக்
கண்ணங்குடியதனை மேவியே - நல
மென்னுஞ்சிலையினுலிங்கைதியெழச்செற்ற
அண்ணலுடனேநாகையழகியாரையுங்கண்டு (செவி)

திருக்கண்ணபுரத்துறை கின்றானை - அங்கே
சேர்ந்துகருவரைபோல் நின்றானை - வளம்
பெருக்குந்தொண்டர்வினையை வென்றானை - நல்ல
பேருஞ்சிறுபுலியூரா னென்றானை - அந்த
அருண்மாகடலமுதத்தையும் வெள்ளியங்குடியில்
வருகோலவில்லிராமனையுமனதுட்கொண்டு (சேவி)

திருவணியழுந்தூரில் வந்தனை - செய்து
தெய்வத்துக்கரசை முகுந்தனை - யின்னந்
திருவிந்தளூரதனைச் சிந்தனை - கொண்டு
சேர்ந்து மருவினிய மைந்தனைப் - புகழ்
விரவுதலைச்சங்கத்தில்விண்ணோர்நாண்மதியையும்
பரவியெம்பெருமானைப்படியளந்தோனேயென்று (சேவி)

நலமேவியதுளவத் தோளனை - நாளும்
நான்மறைபரவிய தாளனை - யென்று
நிலமையாகியகிருபை யாளனை - வள
நேர்வயலாலிமண வாளனைத் - தமிழ்க்
கலியன்முன்னிலையாகக்காணும்பரிவுகொண்டு
நலதிருவாலிதிருநகரிதனிலேகண்டு (சேவி)

விருத்தம்,

புயலாலிணைகளேசொல்லும்பூமேனியவனைவண்டு
செயலாலிகூறுகின்றதிருத்துழாய்மார்பினனை
வயலாலிதனிலேயேத்திவருகவிவாதிசிங்கர்
கயலாலிசையுஞ்செய்நன்னுங்கையில்வந்துபாவினரே.

தரு-இராகம்-முகாரி-ஆதி.

கண்ணிகள்

நாங்கூர்ப்பதியினில்-மணிமாடக்கோயில்
நந்தாவிளக்கையுமேத்திப் - புகழ்
வீங்கும்வைகுந்தவிண்ணகரிற்பின்னைசெவ்
வித்தோள்புணர்ந்தானைப்போற்றி (1)

அரிமேயவிண்ணவர்குருமணியென்னு
மமுதத்தைவந்தனைநீடித் - தமிழ்
மருவுந்திருத்தேவனர் தொகைமேவிய
மாதவப்பெருமானைப்பாடி. (2)

சீர்புருஷோத்தமத்தண்ணனைவான்செம்பொன்
செய்கோயில்வானவர்கோனைத் - தொழு
வார்திருத்தெற்றியம்பலத்திற்செங்கண்
மாலானவானந்தத்தேனை. (3)

மின்மணிக்கூடத்திற்கடுமழைகாத்த
வேந்தினைக்காவளம்பாடி - நாகத்
தின்னடுக்கந்தீர்த்தானையெம்மண்ணலைத்
திருவெள்ளக்குளத்திலேகூடி. (4)

பார்த்தன்பள்ளியிற்செங்கண்மாலவனைப்
பணிந்தருள்பெற்றவிசேஷம் - மிகுஞ்
சீர்த்தியாங்காழிச்சீராமவிண்ணகர்
தில்லைத்திருச்சித்ரக்கூடம். (5)

வந்துவிளங்கியகோவிந்தராஜனை
மங்களாசாஸனங்கூறி - யங்கே
முந்துபரமாசாரியனுநாத
முனியென்னும்பிரானருள்வீறி. (6)

கொண்டுவீரநாராயணபுரத்திற்
குருகாவலப்பன்பிரானைத் - தேவ
மண்டலம்போற்றுந்திருமுட்டமேலாதி
வராகநயினாரென்கோனை. (7)

திருப்பதிகளின்மீதிற்சிறந்தவான்சுடரைச்
சேவைசெய்துமுகந்தாரே - அன்பு
பெருக்கியபேரருளாளரைச்சேவிக்கப்
பெருமாள் கோயில்வந்தாரே. (8)



## பாம்பாண்டியின்கருவமழித்தல்.

### விருத்தம்.

தாம்பாண்டிநாடுமலைநாடுஞ்சோழ
தரணியிலுமுளதிவியதேசமேயெல்
லாம்பாண்டித்தியஞ்சிறந்தபிள்ளைதாமுல்
லாசமதாய்த்தொழுதுகொண்டுகாஞ்சிசேர்ந்தார்
வீம்பாண்டிறமைசொல்லும்வாதிமாவை
வென்றடக்கிவேதாந்தம்விளக்குநாளில்
பாம்பாண்டியொருவன்வந்துவாதுசொல்லப்
பார்க்கின்றார்ஜயவிருதையேற்கின்றாரே.

### தரு-இராகம்புன்னாகவராளி-தாளம்-ஆதி

### பல்லவி.

வேண்டிமந்திரங்கற்றாரே - வாதியானபாம்
பாண்டிதனைச் செயித்தாரே.

### அனுபல்லவி.

பாண்டவர்க்குத்தூதாகத் தாண்டிநடந்த பாத
நீண்டவரதரருள் பூண்டவேதாந்தகுரு. (வே)

### சரணங்கள்.

சோளிகை நரேந்திரேனே - இவர்தந்திரு
மாளிகைவாசன்முனே
நாளொன்றுபவாசத்தால் மீளுங்கோபத்தாற்சொல்வான்
கேளுமென்னைச்செயித்தானீளுங்கீர்த்தியென்றானே. (வே)

சர்வதந்த்ர சுவதந்த்ரம் - விருதுபெற்ற
நிர்வாகர்பாம்பு மந்திரம்
அறிவிராகிற்பிடாரன்நெறிகண்டுநாகங்களைக்
குறிகண்டுதடைகட்டிமறியும் பார்ப்போமென்றானே. (வே)

இவனேடென்ன விவாத - மென்றிருந்தாலும்
அவனேபுசியான் சாதம்
எவர்தாமாகிலும்வந்தொ ருவர்வாசல்காத்திருந்தாற்
கவலையைவிசாரிப்பார் குவலயத்தில் வழக்கம். (வே)

பார்த்துவாவென்று கூறிக் - கோயின்முன்னேழு
கீற்றையிவர்தாங் கீறி
எற்றவுன்னிடத்திலே வாய்த்தபாம்புகளெல்லாஞ்
சேர்த்துவிடுவாயென்றே சாற்றிஞரெங்கள்குரு. (வே)

மிடுக்குடன்பாம் பாட்டி - மாநாகங்கள்
விடுக்குந்திறமை காட்டித்
தொடுக்குந்தருணங்கீற்றைக் கடக்கமாட்டாததுகள்
முடக்கங்கொடுத்ததுகண் டெடுக்குங்கோபமிஞ்சவே.

வாசுகிதட்சக சமான - நாகங்களை
வீசியேவவு மங்கான
பேசியொன்றிரண்டான ராசிரேகையிற்சென்று
கூசிநின்றதுகண்டு மேசிவப்பானுன்கண்கள் (வே)

அங்குரேகையைத் தாவச் - சர்வபூத
சங்குபாலனை யேவப்
புங்கமாயேழுகீற்றை யுங்கடந்ததுமிவ
ரங்கந்தொடவரக்கண் டுங்கருடனையெண்ண (வே)

இவ்விதங்கருடன் வந்தே - சங்கபாலனைக்
கவ்விக்கொண்டு பறந்தே
செவ்வையெழுந்தருள அவ்விஷவயித்ய
னெவ்வயனமறிவான் றிவ்யபாதந்தொண்டென்றான். (வே)

உந்தமடிமை காணுஞ் -சங்கபாலனைத்
தந்துரக்ஷிக்க வேணும்
எந்தங்குருவேயென்று வந்தான்கருடதண்ட
கந்தன்றாற்சங்கபால னும்திரும்பிடத்தந்தார். (வே)

## விருத்தம்.

புண்ணியகோடிகட்கெல்லாமிடமாங்காஞ்சி
புரந்தனிலே சிலகாலமிருந்துபின்னு
மெண்ணியதெல்லாங்கொடுக்கும்வேங்கடத்தி
லேகியேமங்களாசாஸனந்தான்
நண்ணியபின்றிருவரங்கப்பதியைநெஞ்சி
னுடியேயெழுந்தருளிவந்தாரெங்கள்
பண்ணியமிக்கானதபோபலன்கைவந்த
பலத்தினர்தூப்புலென்னுந்தலத்தினரே

## தரு-இராகம்-சவுராஷ்ட்ரம்--தாளம்-ஆதி

### பல்லவி.

பிள்ளையென்றுலிவரே பிள்ளை
ப்ரபலங்கொண்டதாப்புற் பிள்ளை

### அனுபல்லவி.

வெள்ளைப்பரிமுகங் கொண்டார்
மிருந்துலாலாமுத முண்டார் (பிள்)

### சரணங்கள்.

எற்குங்கோயிலுக்கே நண்ண
எழுந்தருளியோர்நா ளுண்ண
மார்க்கத்திற்றளிகை பண்ண
வாய்க்காமலரியை யெண்ண
வழியிலங்கடியிலுள்ள அவரைது
வரைகோதுமைகொள்ளுமுதலாகியவற்றைப்
பழுதில்லாதவேதம்பரவுமெங்கள்வெள்ளைப்
பரிமுகாமுதுசெய்திடவைத்தாரே (பிள்)

கோமுட்டிகள்கண்டு வெள்ளைக்
குதிரையாரதிந்தக் கொள்ளை
தாமிட்டுத்தின்பதும் சள்ளை
தானென்றேட்டிவிடப் பிள்ளை
திரைவர்ணிகராகும்வைஷ்ணவர்க்ருகத்தில்
தங்கவங்கணுமப்படிக்கேசெய்தருள
இவ்வண்ணஞ்செய்ததிதாரதெனவேவேங்க
டேசதேசிகரதென்றறியவைத்த (பிள்)

இம்மஹிமையுள்ள வரிங்
கிவரைவந்தேயெல்லார் தெரி
யும்முடையவெள்ளைப் பரி
யோங்கியெங்கடலைப் பொரி
உள்ளவையெல்லாந்தின்றதிருகால்முக்கால்நாற்கா
லோட்டிவிடப்போகவில்லைநீர்கட்டுமென்றூர்
பிள்ளைவெள்ளைப்பரிமுகரேபட்டினி
பொறுதமுதுசெய்தகிருபையறிந்தனரே (பிள்)

பரமாத்துமசமாரா தனம்
பண்ணுதிருந்தவ யனம்
தெரிவார்பாலமுத சனஞ்
செய்யும்விதிகண்ட தினந்

திருக்கண்வளரப்பின்னயக்ரீவருஞ்
சிறந்துபூரணராயெழுந்தருளினாரே
பெருக்கமிகுமிதைத்திரைவர்ணிகர்கண்டு
பிரபலவதிசயந்தனைக்கொண்டாடினாரே (பின்)

## விருத்தம்.

வித்தியாவைபவானவிவர்தாமுஞ்சீர்
வெள்ளறைப்பங்கயச்செல்விபுருஷகார
சத்தியானுசரிதமாய்க்கொண்டுமேசென்
தாமரைக்கண்ணரைத்தொழுதுதிருக்காவேரி
மத்தியாமரங்காடிபணிவாரங்கே
வந்துதொண்டுசெய்தவைஷ்ணவர்க்காக
நித்தியானுஸந்தேயரகஸ்யார்த்தங்கள்
நிலையிட்டார்மகிமையுள்ளகலையிட்டாரே

## தரு-இராகம்-ஆனந்தபைரவி-தாளம்-ரூபகம்.

### பல்லவி.

கண்டீரவர்வாதிகள்கண்டீரவர்சேஷகிரி
கண்டாமணிரூபகர்கண்டரேபிரசண்டரே

### அனுபல்லவி.

மண்டலமீதில்வரதராஜர்பாதம்
வந்தனைசெய்யுமனந்தகுருமைந்தர்
அண்டியபேர்க்கருளேசெய்யும்வேதாந்தா
சாரியரபரசூரியரேகாணும் (கண்டீ)

### சரணங்கள்.

தத்துவத்திரயசுளகமிரகஸ்யத் திரயசுளகமென்றிரண்டு
தத்துவமாதிரிகைரகஸ்யமாதிரிகை தத்துவபதவிரகஸ்யபதவி
தத்துவநவநீதம்ரகஸ்ய நவநீதமென்னுமின்னந்
தத்துவரத்தினவலி சரளரகஸ்யரத்தினவலி
பத்தரெல்லாஞ்சொல்லும் ப்ரதிபாத்தியஸங்கிரகமிசை
மற்றினனம்ரகசியரத்தினவலியிருதயமுஞ்சொலிமகிமைசேர் (கண்டீ)

பரமபதசோபானமும் பகரும்பிரதானசதகம்
தருமபயப்ரதானசாரம் சம்பிரதாயபரிசுத்தியும்
உரமிகுந்த உபகாரசங்கிரகமுமுசிதமாகிய
திரசாரசம்க்ஷேபர் திருமடியடைவுடனிவையெல்லாங்
கரதலாமலகமாய்க்கண்டமணிப்பிரவாளப் பிரபந்தங்கள்
தரணிமேல்ரஹஸ்யார்த்தங்களின்சம்பிரதாயங்களும் பிரபலமே (கண்டீ)

வெற்றிவிரத்திகூரத்தாழ்வான்வித்தைதனிற்பட்டரென்பார்
நத்திமிக்கானஞானத்தினில் ஞானத்தொருமூர்த்திநிகராய்ப்
பத்திதான்ஒருவடிவகொண்டாரென்றேபன்னிப்பன்னிச்
சத்துக்களதிசயிக்கவே க்ஷமையிற்பூமியென்றே தரிசன
னத்தர்கள்கொண்டாடு மிராமானுஜனிவர்தாமென்றேபிர
சித்தராய்வைபவப்ரகா சிகைவிளங்குந்தேசிகசிகாமணி (கண்ட)
சத்காரகாளகூடந் தருணிகுணபஞ்சபாபுசக்கி
தக்கராஜதானியுங்கும்பீபாகஞ் சமனுகயெண்ணிப்பரிகரி
சற்குருவாஞ்சருவதந்திரசுவதந்திராரியர்தாமிவரே
மிக்கானசீர்வைஷ்ணவர்விளங்கவேயெம்மைவிற்கவும்பெறுவர்
எக்காலுமென்றேதானினை யுஞ்சாந்தாதிகுணபரிபூரண
கற்கடகவிந்துமேகம்போற் கவிமாரிபொழிதிவ்யவாக்குள்ளார் (கண்ட)

## வைதிககர்மானுஷ்டிப்பு.

### வெண்பா.

வாக்குமிகவுண்டாம்வரதாருள்பெறுவ
தாக்குமவர்கருணையாநந்தக்—தேக்கும்
வனசரிகையைச் சொல்லிவாழ்த்துந்தூப்புல்லார்
தினசரிகையைச்சொல்வதே

### தரு-இராகம்-கல்யாணி-தாளம்-சாப்பு.

#### பல்லவி.

தினசரிகைகளைச் சொல்லுவோஞ் - சொல்லியேயெங்கள்
வினைகள்யாவையும் வெல்லுவோம்

#### அனுபல்லவி

வனமாலிகாலங்கிருத மஞ்சுளகந்தரரென்னும்
பனகசயனரடி பணிகவிவாதிசிங்கர் (தின)

#### சரணங்கள்.

பெருமைசிறந்த கலைக்கு - முதலானவர்
பிரமமுகூர்த்தந் துவக்கு - எழுந்திருந்து
திருவடிகளை விளக்கிச் - சுத்தாசமனஞ்
செய்தருளவரன் முறைக்கு - இசைந்துநல்லா
தரவுடனென்னுயிர் தந்தளித்தவரெனும்படி
குருபரம்பரையாய்க்கொண் டடிபணிந்திடும்பிள்ளை (தின)

உதயகாலத்திற் சிந்தித்துத் - தோத்திராதிகளை
யுறுதியாயனு சந்தித்து - யோகசமாப்தியதை
பூர்வகமாய் வந்தித்துச் - சங்கற்பஞ்செய்து
அபிகமனத்தை சிந்தித்துத் - திருக்காவேரி

நதிக்கேகவெழுந்தருளிநாடிச்சுருதிசொன்ன
ததிசவுசாசமனதந்ததாவனுதிசெய்குரு (தின)

தீர்த்தமுறையைப் போற்றி - நீராட்டஞ்செய்து
திருப்பரிவட்ட நேர்த்தி - யாய்த்தரித்தேபின்
ஊர்த்துவபுண்டரங்கள் சார்த்திப் - பவித்ரபாணி
யுடனனுஷ்டான மேத்தித் - தொண்டர்வினையை
மாற்றுமெம்பெருமானைமங்களாசாஸனஞ்செய்து
கீர்த்திமிகுங்கோயிலுக்கெழுந்தருளுந்தேசிகன். (தின)

தரணிசொல்முப்பத்தி ரண்டு - என்றபசாரத்
தையும்பரிகரித்துக் கொண்டு - சேவாக்கிரமத்தில்
திருவடிதொழுவ துண்டு - அங்கங்கேதானே
சிறந்ததற்காலங் கண்டு - பிரபந்தங்களாந்
திருப்பள்ளியெழுச்சிநந்திருப்பாவைகத்தியமுதல்
வரப்பெறுந்தோத்திரங்களைவழுத்தும்வேதாந்தகுரு. (தின)

அருளையுள்ளத்திற் றரித்து - ஆபாதகேச
மாகக்கொண்டு முச்சரித்துக் - கண்டுபெரிய
பெருமானைநமஸ் கரித்து - உடனேதீர்த்தப்
பிரசாதமுஞ்சுவீ கரித்துத் - தம்முடையன்பு
பெருகியாராதனமாம்பேரருளாளரையும்
வருமயக்கிரீவரையும்வந்திக்குங்கண்டாவதாரர். (தின)

அபிகமனத்தை யெடுத்து - வியாக்கியானகூட
மதனில்வந்தே யடுத்து - அவரவர்க
னபேக்ஷாகுணங்கள் கொடுத்துச் - சீபாஷியமுத
லானகிரந்தங்கள் தொடுத்து - மணிப்பிரவாள
விபவரகசியார்த்தங்கள்விளங்கப்பிரஸாதித்தங்கே
சுபமேவுஞ்சருவதந்த்ரசுவதந்த்ராரியர் செய்யுந் (தின)

தக்கசிஷ்யர்மனத்தியா னத்தைப் - பொருந்திக்கொண்டு
சமர்ப்பித்தஉபதா னத்தைப் - பாத்திரமேயத்
தஸ்கரகிராகிய மானத்தைக் - கொண்டுமேயாரா
தனஞ்செய்தருளி ஞானத்தை - விளக்கவந்தார்
முக்கியமாமகத்தியசாகம்முதலாந்திரவியமுடனே
மிக்கதளிகையைச் சமர்ப்பிக்குநிகமாந்தகுரு. (தின)

உச்சிதவைசுவ தேவாதி - களைச்செய்து
உண்மையாகமந்த்ர மோதி - யாகாந்தரத்தில்
இச்சையைச்சமர்ப்பித்து மேதி - னியிற்புகழும்
இராமாநுஜானுபவ ரீதி - ஆழ்வார்கள்சொல்லும்
மெய்ச்சுருதிப்பொருள்களுமேன்மையாம்புராணவகை
அச்சுதகுணவர்ணனையாவுந்தொண்டர்க்கருள்குரு. (தின)

காலாழுநெஞ்சழியு மென்னும் - சொல்லின்படியே
கண்டனுபவித்தவர் முன்னுஞ் - சாயங்காலத்தில்
மாலாயனுஷ்டானத்தின்பின்னும் - அருளாளரை
மங்களாசாஸனஞ்செய்துன்னும் - அந்தரங்கத்தில்
மேலானதொண்டருக்குமிருந்துருக்ஷமார்த்தங்கள்
லாலாமுதமுண்டவர்சல்லாபமாயருளிச்செய்யுந். (தின)

கண்வளர்தலென்பது முண்டு - சபத்தினீகனுங்
கண்ணனைமனதினுட் கொண்டு - யோகநித்திரை
பண்வளர்வந்தவர் கண்டு - எழுந்திருந்தே
பண்டுபோலேநாள்தோறுங்கொண்டு - மாலுக்கேசெய்வார்
எண்வளரும்பிரபந்தங்களெங்கனும்பிரசித்தமாக
விண்வளரும்நிலவென்னவிளங்கும்வேங்கடநாதர். (தின)

திருமேனிவருணனை

வேண்பா

வேண்டுவீரன்புபெறுவீரேபவக்கடலைத்
தாண்டுவீர்ஞானத்தனிவிளக்கைத்—தூண்டுவீர்
தானிவர்னனையுரைக்குஞ்சாந்தவேதாந்தகுரு
மேனிவர்னனையுரைக்கவே.

தரு-இராகம்-முகாரி-தாளம்-சாப்பு.

கண்ணிகள்.

க. கதிர்வீசுமிரவிபோற்கரந்திசேருந்திவ்யமங்
களவிக்கிரகவேதாந்த தேசிகரே
புதுமலர்ச்சியாகியசெந்தாமரைமலரைப்
போன்றபொன்னடியுள்ள தேசிகரே

உ. களங்கமில்லாமல்மனோகரங்களாகியதிருக்
கணைக்கால்களுமிலங்குந் தேசிகரே
விளங்கிநிற்கிறநல்லமுழந்தாளுடையதிரு
வேங்கடநாதார்ய தேசிகரே

ஈ. திருவரையுமதிற்சார்த்தினதிருப்பரிவட்டச்
சேர்த்தியாலும்விளங்குந் தேசிகரே
திருநாபிக்கமலமுந்திருவுத்தரியச்சேர்வும்
சிறந்துவிளங்குமெங்கள் தேசிகரே

ச. மருவுமுந்நூலுந்திருமணிவடத்துடன்கூடும்
மார்பினணிதுலங்குந் தேசிகரே

திருவாழிதிருச்சங்குந்திகழ்புஜங்களுடனே
செழிப்பான நிகமாந்த — தேசிகரே

௫. பவித்ரங்களையணிந்தபங்கஜகரதீர்க்க
பாணியுகம்பொருந்தும் — தேசிகரே
குவித்தேதிருமந்திரமுங்கொண்டதுவயமுச்சரிக்
குந்திருப்பவளவாய்த் — தேசிகரே

௬. கிருபைக்குள்ளாய்க் கடாக்ஷிக்கிற திருக்கண்களென்றே
கீர்த்திக்கவேவளருந் — தேசிகரே
உருகித்தற்காலங்கண்டு சார்த்தினபனிரண்டு
ஊர்த்துவபுண்டரங்களேற்குந் — தேசிகரே

௭. மண்டலந்தனிற்புகழ் கொண்டகண்டாவதாரர்
மவுலிமூடத்துலங்குந் — தேசிகரே
தொண்டர்கள்மனத்தன்பு கொண்டிடுஞ்சர்வதந்திர
சுவதந்தராரியரெங்கள் — தேசிகரே

## கட்டளைக்கலித்துறை.

வடத்தேறுகண்டுயில்கொண்டான்மடுவின்மணியாவின்
படத்தேறுதாண்மிதித்தாடியுங்கோவியர்பாரமுலைக்
குடத்தேறுமார்பர்தங்கண்டாவதாரரைக்கூப்புகையர்
கடத்தேறுவார்கள்கவிவாதிசிங்கரைக்கண்டவரே.

## தரு-இராகம்-பரசு-தாளம்-ஏகம்.

### பல்லவி.

வெகுவிதமகிமைகள் கொண்டார் - கவிவாதிசிங்கரே
விருதாங்கித ராவரே.

### அனுபல்லவி.

இகபரந்தருஞ் சேஷகிரிவேங்க
டேசன் ஸ்ரீநிவாஸனே தந்த. (வெகு)

### சரணங்கள்.

வாஞ்சிதமான காஞ்சிமாநக
ராஞ்சனனமுமிவர்க்கே - விசு
வாமித்திரகுல மாமத்திக்கொரு
சோமசற்குணநாமத்தற்புதர் (வெகு)

ஆக்ஷிபுண்டரீகாட்சராகிய
தீட்சிதர்திருப்பேரர் - எங்கள்
அநந்தாசாரியர்மனந்தனில்மகிழ்
தினந்தோறுஞ்சுனந்தனரிவர் (வெகு)

நன்னலயதி மன்னர்தமையே
யுன்னுவதுசீவனராம் - நம்ப
ராங்குசர்பதந் தாங்குமனதி
லோங்குபர காலாங்கிரிகொண்டார் (வெகு)
உற்றொருகாலில் வித்தையாவுங்கொள்
புத்திமானிவர்தாமே - வெகு
உறுதியுள்ளாரென்றறி வீர்கலைக
ணெறிகளறிந்துபொறுமையுள்ளவர் (வெகு)
ஓங்குலகினி லீங்குசொன்னமோட்
டாங்கினிஞ்சிலாயெண்ணினர் - வெகு
யோக்கியர்வை ராக்கியத்திற்சி
லாக்கியசுகராக்குமிவரே. (வெகு)

## வெண்பா.

தாமாங்கண்டாவுருவந்தாங்குவேதாந்தகுரு
வாமாங்கவரடிமையாமெனவே—மீமாஞ்சை
நல்லவரும்பொருளைநாடினவராகிய பே
ரெல்லவருங்கைதொழுவாரே.

## இராகம்-கேதாரகவுளம்-தாளம்-சம்பை.

### கண்ணிகள்

க. சருவதந்திரசுவதந்திரர்திரு - வரங்கமதிற்றரிசனமே
தழைக்கவளர்நாளதனி னேரே
உரிமைகொண்டுமிவர்தந் திருவடியில்விசேஷக்கியரெல்லா
முண்மையாகவந்தாசிரயித் தாரே
உ. அவர்களிற்பேரருளாள - ரெனுமொருவர்குணசீல
ரதிகமேதாவியதி னாலே
குவலயத்திற்கீர்த்திபெறு - மெதிராசார்க்கந்தரங்கர்
கூரத்தாழ்வானவரைப் போலே
ந. பரிந்திவர்க்குமந்தரங்கர் - பேரருளாளருமாகிப்
பஞ்சசமுஸ்காரமுதல் வாய்ந்த
விரிந்துபயவேதாந்த - சகலசாஸ்திரங்களையு
மிகவுமதிகரித்ததில்வே தாந்த
ச. பூர்ணராயிருக்கையினல் - பிரமதந்திரசுதந்திரரென்று
புகழ்ந்துதிருப்பேருங் கொடுத்தாரே
காரணப்பேர்கொண்டவர்நல் - விரத்தியாற்சன்னியசித்துக்
கார்த்திருக்கவந்து தொடுத்தாரே

ரு. பிரமதந்திரசுவதந்திரசியர் - பிரபாகரசியரெனும்
பிரபலராம்வெண்ணெய்க்கூத்த சீயர்
தரணிதனிலெங்கும்புகழ் - வீசும்பூரிராமாநு
சாசாரியராகிவந்த தூயர்

சு. ஒப்பிதஞ்செய்திவர்கண்முத - லானோர்க்கும்ஸ்ரீபாஷ்ய
முடையவர்பிரபந்தங்களி னீதி
அப்புள்ளார்தமக்குமுன்சொல் - திருக்குருகைப்பிரான்புள்ளா
ளுருயிரப்படியு மோதி

எ. மற்றுமின்னஞ்சாரார்த்த - சதுஷ்டயமும்ரகசியார்த்த
வரிசைகளெல்லாமருளிச் செய்தே
தத்துவடீகைமுதலான - சம்ஸ்கிருதங்களும்ரகஸ்ய
சாலங்கள்செய்ததுமப் போதே

அ. தானிதெல்லாமிங்கிவர்க - ளானசிஷியர்களுக்கேபிர
சாதித்திருக்கிறநாளி லங்கே
ஞானபத்தியுடனேவை - ராக்கியசம்பத்தையுமாசா
ரவிருத்திகளையுங்கண்டு மிங்கே

கூ. நடக்குமிவர்பாஷ்யகார - ரவதாரமென்றிவர்சன்
னிதிகண்டேபத்திகொண்ட வாயர்
வடக்குத்திருவீதிப்பிள்ளை - யென்னுமவர்தந் திருக்கு
மாரராம்பிள்ளைலோகா சார்யர்

ய. உண்மையாம்ஸ்ரீபாஷியந் - தேசிகனையாசிரயித்து
உபதேசமாகவுங் கொண்டாரே
வண்மையாமெதிராசர் - பிரபந்தமேகாலக்ஷேப
மாயிருக்கயாவருங் கண்டாரே

யக. பிரபலமாய்முப்பத்தொரு - பாஷ்யம்வேதாந்தகுரு
பிரசாதித்தருளின வராமே
வருதிரும்சத்துவாரஞ்சிரா - விதசாரீகபாஷ்யவகையை
யருளினவரிவர் தாமே

## தரிசனத்தார் அசூயை கோள்ளல்.

### கட்டளைக்கலித்துறை.

கவிவாதிசிங்கமெனவேதிருவரங்கத்திலிருந்
துவியாக்கியானம்பயில்கின்றநாளிலசூயையினூற்
செவையாகமுன்வந்தழைத்தார்கள்வாதிற்றெரிசனத்தா
ரிவர்தாம்பொறுமையிற்பூமியென்றேசொல்லுமெங்கணுமே

தரு-இராகம்-மாஞ்சி-தாளம்-சாப்பு.

பல்லவி.

பொறுமைக்குள்ஙிகமாந்ததேசிகனே - இந்தப்
பூமண்டலத்திலெங்கும் பூசிகனே.

அனுபல்லவி.

வறுமைதவிர்க்குங்கச்சிவரதரேகுலதெய்வ
முறுதியென்றுபணிந்துஉலகம்புகழவந்தார்

சரணங்கள்.

வாதத்துக்கழைத்தார்கள் தரிசனத்தர் - பாக
வதாபசாரமிதென்றே தெரிமனத்தர்
ஆதலால்வாராதுகண்டசாமர்த்யரிவரென்று
பாதரக்ஷைவாசற்படிமுன்கட்டக்கண்டாரே (பொ)

ஞானத்தைப்பிடிப்பார்கள் சிலபேர்கள் - கர்ம
நடத்தைகைப்பிடிப்பார்கள் சிலபேர்கள்
ஆனத்தினாலேநாங்களரிதாசர்பாதுகையைத்
தானத்தைச்சிரமேல்வைத்தானந்தம்பெற்றோமென்றார் (பொ)

அவர்களெல்லாருமிவர் மகிமைகண்டார் - வந்து
அபசாரக்ஷாபணங்கள்செய்துகொண்டார்
அவதாரபுருஷர்வேதாந்தாசாரியரென்று
இவரேவைராக்கியநிதியிவரேகலியாணகுணர் (பொ)

கட்டளைக்கலித்துறை.

நடையுடைபாவனையெல்லாநடத்தையுஞானமுமே
புடைசூழ்பெரியவர்கொண்டாடவேவந்தபுண்ணியர்காண்
தடையானதில்லைநிகமாந்ததேசிகர்தாரணிமேல்
விடையவிரத்திதொடுத்தாரெனச் சொல்லிவேண்டுவமே

தரு-இராகம்-பியாகடை-தாளம்-ஆதி

பல்லவி.

தொடுத்தாரேவிரத்திவிரதத்தின்மனங்கொடுத்தார்தேசிகரே.

அனுபல்லவி.

தொடுத்தார்வைராக்கியநிதியென்றும்போதா
வெடுத்தேயருளாளரிவர்சொப்பனத்தில்வரத் (தொ)

சரணங்கள்.

உம்முடையவிரத்திகண்டுகந்தோமானலு
மும்மக்குக்குமாரர்பெற்று மின்ன

இம்மையிலொருநாளாகிலுந்தேவியா
  ரிடத்திினிற்பிரவர்த்தியு | மென்ன
எம்மாலென்றவருமனுஷ்டானஞ்செய்வதற்
  கேற்குமோவென்னவும்பிர | சன்ன
செம்மையாயுமக்குநாம்புத்திரராகவந்து
  செகத்திலவதரிப்ப | மென்னத் (தொ)
நமக்காகநீருமொருநாள்கர்ப்பாதானஞ்செய்வீர்
  நாட்டினிஷித்தமல்ல | பாரு
முமக்குப்பிறக்குஞ்செல்வர்தமக்குத்திருநாம
  முண்மையாய்ச்சாற்றுமன்பு | கூறு
மெமக்குப்பிரீதியென்றேவரதாருளிச்செய்ய
  விவருமனதிசைந்து | நேரும்
இமைக்குந்திருக்கண்விழித்தாச்சரியங்கொண்டார்
  வயிராக்கியநிதியென்றுயர் | பேரும் (தொ)
அவனுக்குவுகப்பாகிலப்படிச்செய்வோமென்று
  அருளாளர்கிருபைதன்னை | யேற்றுக்
கவனத்துடனேகர்ப்பாதானஞ்செய்வதற்குயர்
  காலஞ்சோதிஷநூலைப் | பார்த்து
நவமுற்றகிரகங்களுஞ்சுபமாய்ப்பனிரண்டாண்டி
  னல்லநாளென்றென்றுக்குக் | காத்துத்
தவமிக்கதேவியரிடத்திற்கர்ப்பத்தைத்தாமே
  தரிப்பித்தருளியன்பு | சேர்த்து (தொ)

### நயினாராசாரியர் திருவவதாரம்.

கற்பனைசேர்பாமாலைகண்ணனடிக்கேசாற்று
மற்புதவேதாந்தார்யரவர்தாஞ்—சொப்பனத்தில்
வந்தருளுங்கச்சிவாதர்திருவருளாற்
றந்தருளுஞ்செல்வரைப்பெற்றார்.

### தரு-இராகம்-மத்திமாவதி-ஏகதாளம்.

பல்லவி.

செல்வரைப்பெற்றார்திருவேங்கடநாதர் செல்வரைப்பெற்றார்

அனுபல்லவி

செல்வரைப்பெற்றாரேகல்விமிகுத்தாரே
சீராருந்தூப்புற்றிருவேங்கடநாதர் (செல்)

சரணங்கள்.

திருநக்ஷத்திரநாற்பத்திரண்டினிற்
சேர்ந்திடுநளசம்வச்சரத்திலே
பெருமையாகிய வாவணிரோகிணி
பேரருளாளர்குமாரராகிவரச் (செல்)

வருகுமாரர்க்குச்சாதகன்மநெறி
வண்மையாய்ச் செய்துமீராறுநாளிலே
வரதராசர்தங்நியமனப்படி
வரதநாமமெனத் திருநாமம்செய் (செல்)

திருவிளையாட்டுமாடிக்கொண்டேயிந்தச்
செல்வர்வளர்ந்திடுநாளிலயக்கிரீவர்
திருவிளையாட்டின்மகிமைக்கண்டவர்
தெரிசனத்தையு நிலைநிறுத்தினர் (செல்)

ஸ்ரீ ஹயக்கிரீவப்பெருமான் நிமந்திரணத்துக்கெழுந்தருளியது.

விருத்தம்.

பொருமைமிகுமிவருக்கேவரதநாதன்
புத்திரனுயவதரித்துவளருநாளிற்
சிறிதுபேர்தரிசினத்தார்தாமேகூடித்
திருவத்தியயனத்தில்விரோதஞ்செய்தார்
திறமையுள்ளவிவரறிந்துகலக்கமில்லாச்
சித்தசுத்தராயிருந்த தெளிவினுலே
உறுதிகொண்டுவெண்பரிமுகத்தர்தாமே
யுண்டிட்டாரமுதுசெய்யக்கண்டிட்டாரே.

தரு-இராகம்-கலியாணி-தாளம்-ஆதி.

பல்லவி.

அமுதுசெய்யக்கண்டுகொண்டாரே
யருளாளரயக்கிரீவரைக்கண்டாரே

அனுபல்லவி.

திமிரந்தன்னைத்தீர்க்குந்தேசிகர்க்கேயுகந்து
திருத்தந்தையனந்தார்யர்திருவத்தியயனத்தில்வந்து (அமு)

சரணங்கள்.

திருவத்தியயனத்தின்முதனுட்டானேயிவர்
ஸ்ரீவைஷ்ணவர்க ணிதானம்

வரணஞ்செய்திருக்கவேசிலர்களசூயையாலவ்
வைஷ்ணவர்களுக்குப் பரதானந்
தரவும்வாங்கிக்கொண்டவர் மோசஞ்செய்துபுசித்துத்
தாம்பூலந்தரித்து மஞ்ஞானம்
விரவியிருந்தவர்கடிருவத்தியானகார்ய
விக்கினஞ்செய்யக்கண்டந்தவேளை யெம்பெருமானம். (அமு)

அந்தவேளையில் ஸ்ரீவைணவர்கிடையாமை
யாலேவிசாரங்கொண்டு தேடிச்
சிந்தைசெய்திவர்பின்புதெளிந்து நமக்குல
தெய்வம்வரதரென்று நாடி.
எந்தமயக்கிரீவருமிருக்கக்குறையென்னென்
றிதயத்தில்வைத்தங்கே நீராடி
வந்துதான்கேசவாதிநாமங்களையுஞ்சாத்தி
மற்றுந்திருவத்தியனகிர்த்தியத்தில்வந்து கூடி(அமு)

வகைகொண்டேமூவன்னமும்வரித்தங்கேயயக்கிரீவர்
வந்தருள்வாரென்றன்பு மீறிச்
சகலபதார்த்தங்களும்பரிபாகமானதெல்லாந்
தளிகைதன்னிலே பரிமாறிச்
செகந்நாதரானவயக்ரீவரைத்தியானித்தங்கே
திரைபரிமாறித்துதி கூறிச்
சுகமாய்வெளியில்வைஷ்ணவபிதுருமந்திரங்களைச்
சொல்லிக்கொண்டிருக்கின்ற நல்லவேளையிற் றேறி(அமு)

கட்டியசோறுடன் - கறியுந்தயிருமெல்லாங்
கலந்துடனுண்டார்வாசு தேவர்
ஒட்டியமுதுசெய்யு - மோசையுமுறிஞ்சலி
னோசையுமாயிருந்திங் கிவர்
சிஷ்டராம்விதுரான்னம் - புசித்ததுபோலேகொண்டார்
திருப்தியடைந்தார்பிதிரு தேவர்
சட்டமதாயிருந்து - தாம்பூலாதிவகையுஞ்
சமர்ப்பிக்கலாலாமுதந் தந்தாரேயயக்கிரீவர்(அமு)



கனகதாராஸ்தவம் அருளிச்செய்தது.

விருத்தம்,

நலந்தர வேவெண்பரிமுகத்தால்வந்த
லாலாமுதஞ்சிந்தியிருந்ததெல்லாங்
கலந்தெடுத்துத்தேவிகள்கைகொடுத்துவைத்தா
கதிகொண்டேசிறுகுழந்தைவரதநாதன்

மலர்ந்தகையாலெடுத்துண்ணப்பின்புகேட்டு
மைந்தனிவன்செய்ததிதோவென்றுதானே
ஞாலந்தழைக்குமென்பதற்கு வேறாய்ச்சொன்ன
கூறுதானடந்ததும்வ்வாறுதானே.

தரு-இராகம்-சாவேரி-தாளம்-ஆதி

பல்லவி.

சாமியெங்கள்கருணாநிதி-குருசாந்த-வேதாந்தநிதியிவர்தாமே.

அனுபல்லவி.

பூமிபுகழுங்கச்சிப் பேருளாளர்பாதப்
பூங்கமலம்பரவும் வேங்கடநாதகுரு (சா)

சரணங்கள்.

அந்தநாள் பிரமசாரி யொருத்தன்வந்து
அங்கங்கேதனவான்க ளாரென்றெங்கும்விசாரித்
தெந்தன்கலியாணத்துக்கே யெவர்கள்சொன்னங்கள்வாரித்
தந்திடுவாரென்றானே தந்ததிவர்சொன்னமாரி (சாமி)

இதுதருணத்தினல்ல தனவானிவரென்று
இவர்திருமாளிகையைக் காட்டியேசிலர்சொல்ல
அதுநிசமாமென்றெண்ணி யவனுமிவர்பாற்செல்ல
மதுரமிகுந்தகவி மாரிபொழியவல்ல (சாமி)

பரிவாயனுக்கிரகித்த பாகவதர்கள்சொற்ற
படியேபெருமாள்கிருபை பண்ணுவாரென்றுமெத்த
பெரியபிராட்டியார்மேல் சீர்த்துதியென்றுரைத்த
வரிசையதினாற்சொன்னம் வாரிவாரிக்கொடுத்த (சாமி)

கட்டளைக்கலித்துறை.

மோகாடவிதன்னைநீக்கின்றதீரமுமுக்ஷுவிவர்
யோகாதிசயமதென் சொல்லாமிவ்வுலகத்திலே
தேகாபிமானங்களின்றிநின்றாரெங்கள்தேசிகரே
ஏகாதசிவிரதந்தவறாமலிருந்தவரே.

தரு-இராகம்-கவுளிபந்து-தாளம்-ஆதி.

பல்லவி.

வேதநியமனமே-வேங்கட
நாதர் நியமனமே.

### அனுபல்லவி.

மாதிரமேல்விசுவா மித்திரர்கோத்திரர்
சாதகராமா நுஜதயாபாத்திரர் (வேத)

### சரணங்கள்.

இச்சையில்லாமற்சில ரசூயையைத்தொடுத்தாரே
யேகாதசிவிரத மதனில்வந்தடுத்தாரே
அர்ச்சகருக்குப்பரி தானமுங்கொடுத்தாரே
அருட்பாடென்றுதயிர்த் திரளையையெடுத்தாரே (வேத)
வாங்குமெனப்பெருமாள் சன்னிதிமுன்சென்றாரே
மஹாப்பிரசாதஞ்சிர சாவகிக்கின்றாரே
தாங்குமோலைப் புறத்து நியமத்துநின்றாரே
சாட்சாங்கியமனமோ வடியேனுக்கென்றாரே (வேத)
அறிவுமிகுந்தசோதை திருமூலப்பாலுண்டாரே
அர்ச்சகரிடத்தினி லாவேசமுங்கொண்டாரே
முறையிதுநாங்கியமிக்க வில்லையெனவிண்டாரே
முன்புநியமனமே நியமமெனக்கண்டாரே (வேத)

### விருத்தம்.

குண்டலத்தினுலென்னகடுக்கனென்ன
கொண்டவிரலாழியென்னசாலுவென்ன
கொண்டலர்த்தித்திரிவதினுலாவதென்ன
குவலயத்தில்விபுதர்களேசொல்லக்கேண்மோ
விண்டலத்தினர்பரவுமரங்கமீது
வேதாந்ததேசிகன்றன்றேவியார்க்கு
மண்டலத்தின்மின்னுமின்னுப்பூச்சியாம்பொன்
வராகந்தானிவர்க்குமனவிராகந்தானே

### தரு-இராகம்-சவுராஷ்டிரம்-தாளம்-சாப்பு.

கண்ணிகள்

1. அப்புள்ளார்தந்தவிரகாரம்வேதாந்தா
சாரியார்போலினி யாரய்ய
இப்புவிமேல்வைராக்கியநிதியென்ப
திவரென்றேசொலுவா ரய்ய
2. ஆரெங்கும்போற்றிய ஸ்ரீரங்கமாநக
ரதிலேசேஷர்க்குப் பாடமே
பேரெங்குஞ்சொல்லப்பிரசாதித்திருந்தாரே

பெரியவியாக்கியான கூடமே

3, கொண்டவரங்குமேமுஞ்சவிர்த்திசெய்து
கொண்டுசொன்னாடி மீதிலே
தொண்டுசெய்யும்சீஷரெல்லாரும் வந்து
தொடுத்துவணங்கியப் போதிலே

4. பாடசமயமுந்தாமதமாயது
பண்புடனேயடி யோங்களே
தேடியாளுக்கொருநாளுபாதானத்தைச்
செய்துசமர்ப்பிப்ப நாங்களே

5 ஆகுமெனச்சொல்லப்பிள்ளை கருத்துட
னப்படிப்பாடமுஞ் சாற்றினர்
சேகரமாகிய சீஷருபாதானஞ்
செய்துசமர்ப்பித்து மேற்றினர்

6. காசுபணங்களை யங்கீகரியாது
கண்டு சிலபேர்கள் கூடவே
தேசுபெறவே யமுதுபடியுடன்
சேர்த்துப்பணங்களைப் போடவே

7. இட்டவுபாதானக் கூடையோடேயுள்ளே
இங்கிந்தத்தேசிகர் மேவியே
கொட்டவுங்கண்முன்னே கண்டவுடன்பார்த்துக்
கூறுவரேயவர் தேவியே

8. மின்னுமின்னுபூச்சி போலேயிருக்கிற
வேடிக்கையென்னென்று பேசுவார்
சன்னையறிந்துகடாக்ஷித்துக்குச்சியாற்
றள்ளிப்புழுவென்று வீசுவார்

9. சாதித்துச்சோதித்துக்காசுபணங்களைத்
தள்ளியிருந்து வைராக்கியர்
போதித்துசீஷர்க் கருள்செய்யவேவந்த
புண்ணியஸ்வரூப சிலாக்யர்

10. நேர்ந்தவக்காலத்தி லாசாரியபத
நிருவகிக்கவும் வருவரே
வாய்ந்தவழகிய மணவாளப்பெரு
மாள்நயினரு மொருவரே

11. சகலசாஸ்திர வல்லவராகவுஞ்
சாஹித்யத்திலே சதுராராய்

சுகமுடனெழுந்தருளி யிருந்தார்
சுகுணர்சொல்லிலு — மதுராராய்

12. மேதாவியாகிய வங்கவர்சீஷர்வி
ரைந்துதிருவோலக்க — மதிலே
வேதாந்தாசாரியர் தங்கவி வாதிசிங்க
விருதைக்கண்டுரோஷம் — மதிலே

13. திருவோலக்கத்தி லிரண்டுபேரையுஞ்
சேர்த்தழைத்தருள் — பாடென்று
இருவர்களேகேளு மின்றிராத்திரி
யெம்பெருமான் விஷய — மொன்று

14. ஆயிரமென்னுஞ் சுலோகப்பிரபந்தத்தை
யார் விண்ணப்பஞ்செய்வார் — சமர்த்தரே
மாயிருஞாலத்தில் வேதாந்தாசாரியர்
வளமைமிக்க — நியமத்தரே

15. இப்படியேயின் றிராத்திரிக்குள்ளே
இயம்புவீரென்று — ராயிரம்
அப்படியே திருவடி விஷயமதாகச்
சொல்வேனென்று — ராயிரம்

16. வாதுகாட்டியங்கே அழகியமண
வாளருரைத்ததும் — கண்டிட்டார்
பாதுகாசகஸ்ரம் வேதாந்ததேசிகர்
பண்ணுவேனென்றுரை — கொண்டிட்டார்

பாதுகாஸஹஸ்ரம் அருளிச்செய்தது.

வேண்பா.

படியளந்த செங்கமலப் பாதத்தைச் சொல்ல
அடியேற்குமுண்டோ வறிவு—நெடிதாம்
திருவடி நன்னிலைமேற் செய்குவேமென்ற
குருவடியைக் கையேநீ கூப்பு

இராகம்-மணிரங்கு-தாளம்-சாப்பு.

பல்லவி.

வாதுகாட்டிமுன்னே-பாதுகாசகஸ்ரஞ்சொல்
வாதிசிங்கராமிவரே.

அனுபல்லவி.

பேதமைதீர்க்குமரங்காநாதனருளுங்கோயிற்
பெரியவோலக்கத்திலே பெரியோரெல்லாருமெச்ச (வாது)

சரணங்கள்.

புதகமலசகஸ்ரமொருவர் தாமுமேவிண்
ணப்பஞ்செய்வேமென்றே யேற்று
அதுவேவிசாரமாகி யொருராத்திரிப்பொழுது
மடங்கலும்விழித்துப் பார்த்து
இதனுள்ளேஞ்னூறுசுலோகங்கவனம் பண்ணினரவ
ரிவரோராயிரஞ் சேர்த்து
மதுரமயமாய்ச்சித்திர கவிதையலங்காரமாய்
மகத்துவஞ்சேர்பாதுகாசகஸ்ரமென்றருள் செய்தார் (வாது)

கவனஞ்சொல்லுவதென்றூற் சிறுபிள்ளைவிளையாட்டா
கடாக்ஷம்பெற்றிட வேணும்
தவம்பண்ணிப்பிறந்தவர் கவனஞ்சொல்லுவாரென்று
தானேயெவர்க்குந் தோணும்
தவறுமசால்விதுவென்று தெரியாமறபிதற்றுவர்
சாற்றுகவிகள் காணும்
புவனமெங்கெங்குமெச்சு முபயகவிப்பிரபந்தம்
பூட்டினார்வாதிசிங்கர் நாட்டினார்கீர்த்தியாக (வாது)

எழுத்துச்சொற்பொருள் யாப்பலங்காரமென
வைந்தாமிலக்கணநெறி காட்டி
அழுத்தமாய் மதுரமாய்ப் பிரபந்தகவிகள்
சொல்லுமவரேகவி கிரீட்டி
முழுத்திறமையில்லாத அரைவாயர்கால்வாயர்
முறுக்குவார்வீம்பு சூட்டிக்
கழுத்திற்கத்திக்கட்டியே சமர்த்திற்பாடும் வல்லமை
கவிராஜரெல்லாம் பணிகவிதார்க்கிககேசரி (வாது)

பன்றிபலகுட்டிகள் சடுதியிற்பெறுவதாற்
பலனென்ன அதினாலே
ஒன்றும்பெண்ணானையது பனிரண்டுவருஷத்துக்
கொருகுட்டி பெறல்போல
நன்றிதுவழகிய மணவாளப்பெருமாள்
நயினார்சொன்னது மேலே
யென்று வணங்கிச்சொல்ல வரங்கர்பிரமாத
மேறுங்கவிவாதிசிங்கேறென்றிடவேகொண்டார் (வாது)

விருத்தம்.

தெரிசனத்தாசூயையில்லாதிருக்கவென்ற
ஸ்ரீரங்கபதிசன்னிதியிலேநாளும்

வரிசையாய்ப்பிரார்த்தித்துக்கொண்டிருந்தார்
வடக்குவீதிப்பிள்ளையிட்டுக்கோசம்
பெரிதாகச்செய்ததனைப்பார்க்கவேண்டிப்
பிள்ளைலோகாரியரைக்கேட்டுவாங்கி
வாவெனவேசீடரிருவரையனுப்பும்
வழிசொல்வேன் பின்னடந்தமொழிசொல்வேனே

நிகமபரிமளம் அருளியது.

இதுவுமது.

பிள்ளையினிடத்திற்பிள்ளைலோகாரியர்
பேரியற்பாஷியம்படித்தார்
பிரபலமதுதானப்படியிருக்கப்
பேசினாவர்சீஷர்முன்பாய்த்
தெள்ளியமொழிநம்மையருமீட்டைச்
செய்துநம்பிள்ளையாங்குருமுன்
சீர்பெறக்காட்டவீயுண்ணிமாதவர்
செங்கையிற்றந்ததாமென்ன
விள்ளுவார்கோசமேகொண்டுபார்த்தல்
விதியதோவுபதேசமுறையே
வேண்டுமேயென்றார்சீஷர்தாம்வந்து
பிள்ளையில்லாவுடமையா
கொள்ளையாவிங்குளாரிடம்படிக்கக்
கூறுவீரென்றதையறிந்தே
குருமணிநிகமபரிமளமருள்செய்
குருகிருபாநிதியிவரே

தரு-இராகம்-அடாணா-தாளம்-ஆதி.

பல்லவி.

விள்ளுவாரெங்கள் துன்பத்தைத்தள்ளுவாரே
வேதாந்தப்பொருளையெல்லாம்.

அனுபல்லவி

விள்ளுவார்த்திருக்குருகைப்பிரான்
பிள்ளானிட்டவாறுயிரப்படிப்பொருள்
உள்ளதைத்தமக்குபதேசமாக அப்
புள்ளாரவரிதையனுபவமாக (விள்)

### சரணங்கள்.

அமுதமயநிகமபரிமளமென் றுரைசெய்யுமென்பதி
னாயிரப்படிதிருவாய்மொழி வியாக்கியானமும்
அமலனாதிப்பிரானுக்குமுனிவாகனபோகமென்
றுண்டாக்கியதொன்றான வியாக்கியானமும்
சமரசமாங்கண்ணிநுண் சிறுத்தாம்புக்கொருவியாக்கியானமும்
சங்கிரஹத்திருவாராதனக்கிரம ஞானமும்
குமுகுமுவென்றேமணந் தருமல்லிகை புஷ்பவாசனை
கொண்டவாக்குத்தனமாகப்பிரசண்டவாரிதிநிதானமும் (விள்)
பிரபத்திசாஸ்திரத்திற் சங்கிரகமாய்வேணுமென் றங்குளபெரியோர்
பிரார்த்திக்கநியாசவிஞ்சதி நாட்டியே
பிரபந்தசாரமென்றுசொல்லியாழ்வார்களுடைநாளூர்திங்கள்
பேசிவந்தமுதமயமாய்ச் சூட்டியே
பிரபன்னருக்கு உண்மையாகவர்ச்சியாவர்ச்சியத்தெளிவுகொண்டு
பேர்பெறுமாகாரநியமப் பாட்டுமே
பிரபலமானசர்வாதிகாரமா நித்தியானுசந்தேயப்
பெருமந்திரமாகுநல்லதிருமந்திரச்சுருக்குங்கூட்டமே (விள்)
கேளுமையாதுவயச்சுருக்குசரமசுலோகச்சுருக்குடனே
கீதார்த்தசங்கிரகப்பாட்டும் பாடினார்
தோளிலெக்கியோபவீதப்பிரதிஷ்டாவிதாயகமான
சுலோகங்கள்செய்தருளிப்புகழ் தேடினார்
ஆளுமெம்பெருமான்கச்சிப்பேரருளாளர்
ஹயக்ரீவாராதனங் கூடினார்
மீளுமிந்தவைபவஞ்சொன்னபேர்பாடினபேர்கள்
வேண்டுவதெல்லாப்பெறவேயாண்டவர்கிருபை நீடினார் (விள்)

### கட்டளைக்கலித்துறை.

பாடிப்படித்துமனப்பத்திவேண்டுமிப்பாரிடத்தே
நீடித்தகீர்த்திசெய்வேங்கடநாதனைநெஞ்சில்வைத்தால்
நாடிக்கொள்யாவுங்கைகூடுங்கண்டீர்நன்னிலந்தனிலே
கோடிக்குள்ளே யொருஞானியுண்டாமென்று கூறுவதே.

### தரு-இராகம்-மத்தியமாவதி-தாளம்-சாப்பு.

### பல்லவி.

சொல்லக்கேளுமே - தேசிகர்வைபவம்
சொல்லக்கேளுமே

ஙஙஙு

**அனுபல்லவி.**

மல்லருடன்பொருங்கச்சி வரதாருளேயேத்திச்
சொல்லுவீரேதோதாரம்மன் சுகுமாரரிவர்கீர்த்திச் (சொல்)

**சரணங்கள்.**

காதமிகுந்தவடக்கே யேகசீல
ராங்கரிராஜமஹேந்திர பட்டணபால
மாதவநாயகன்றன்மன தனுகூல
மைந்தன்சர்வஞ்ஞசிங்கற்கருளி யதுசால (சொல்)
உறுதிபரமைகாந்தி தருமத்திலேபுத்தி
யுண்டானவனுகிக் கொண்டிருப்பதைநத்தித்
திராமானுஜதரிசனத்தை நிலைநிறுத்திச்
சிறந்திருப்பாரிவரென் றறிந்ததுவேவெற்றி (சொல்)
ஸ்ரீரங்கநகரத்தின் ஞானதிகுணத்தேட்டுச்
சேர்ந்திருக்கின்றவிவர்வைபவமெல்லாங்கேட்டுப்
பாரெங்கும் புகழிவர் ஸன்னிதிக்கன்புபூட்டும்
படிதானிரண்டுவைஷ்ணவர்களை வரக்காட்டும் (சொல்)
தத்துவவிஷயமுடன் ரகசியவிஷயமாகத்
தனக்குஞானமுண்டாக ஹிதவுபதேசமாக
வைத்தருள்செய்யவேண்டி விண்ணப்பம்பரிவாக
வரவிட்டதுங்கண்டு வகையும்விவரமாக (சொல்)
அந்தவகையுள்ளவன்மனத்தைச் சோதித்துக்கொண்டு
அறிந்துசுபாஷிதநீவி யென்பதுகண்டு
சந்ததத்துவரகசிய சந்தேசமென்றிரண்டு
தாமிந்தமூன்றுகிரந்தஞ்செய்தாரின்னமு முண்டு (சொல்)
சத்துக்களாம்பெரி யோர்களைநீநாடு
சமயாசாரமதை நிலைநிறுத்தவுங்கூடு
உற்றபிரஹ்மஞான விரோதரைத்தள்ளிப்போடு
உண்மையிதென்றுமின்ன மெழுதியதின்சூடு (சொல்)
எந்தநாளுமனது பாரமெல்லாமுற்று
லக்ஷ்மீநாயகரிடமது தனிலேவைத்து
கந்தபயோதரத்தை நாடுஞ்சாதகமூற்றுக்
கார்மேனியனை நாடென் றெழுதியதையுற்று (சொல்)

சர்வஞ்ஞசிங்கப்பநாயகன் ஆசிரயித்து.

**விருத்தம்.**

கதிர்கொண்டுவீசுநிலவெண்ணுங்கீர்த்திக்
கவிவாதிசிங்காருள்பிரபந்தங்கண்டே

சதிர்கொண்டுவிளங்கியமாதவன்றன்செல்வன்
சர்வஞ்ஞசிங்கநாயகனுந்தானே
எதிர்கொண்டுபணிந்துவந்தசாதனத்தை
யேற்றுமிகஞானியாயிருந்தானய்யா
முதிர்கொண்டுமெதமிலாரவர்முமுக்ஷுு
முத்தர்தாம்மணிவண்ணர்பத்தர்தாமே

தரு-இராகம்-உசேனி-தாளம்-ஆதி.

பல்லவி.

சாந்தகுருவே - உபயவே - தாந்தகுருவே.

அனுபல்லவி

பாந்தமுள்ளரங்க தாந்தரடியையே
காந்தமுடன்றுதி சேர்ந்தவாதிசிங்கர். (சாந்த)

சரணங்கள்

அகந்தோநாகந்தே யென்றெடுத்தகவி
யதிலேநீலமேகமனைய வுருக்கொண்டு
சகந்தனிஞதாரமாகியகிபதி
சயனபகவனை யனுதினமுங்கண்டு
உகந்ததேசிகவாக்குகளேயென்மனத்தி
லுறுதியாகவேயிருப் பதுவுமுண்டு
அகந்தையேயுனதுவிளையாடலுக்கிடம்
யானல்லபோவென்றே யாணவத்தைவிண்டு (சாந்த)
இவளவுமகிமையுள்ளார் வாசற்றிண்ணையினில்
வியாக்கியானம்புரிந்திருந்தா ரகலாது
அவளவிற்கந்தாடைத் தோழப்பர் தம்முடைய
குமாரலட்சுமணசாரியார் வீதிமீது
தவளசங்கமுதலானவாத்தியவோசை
தரவேமயமுந்தருளிவரவு மப்போது
இவரெழுந்திருக்கவிலையாற்சாத்தாதவைஷ்ணவர்
காலைப்பிடித்திழுத்தா ரவர்தீது (சாந்த)
அடிக்குமவனேனுஞ்சபிக்குமவனேனு
மதிகடோரவார்த்தைசொல்லு மவனேனும்
படிக்குள்வேதியரேயாகிலவரெயே
பணியாதிருப்பவர்யா ரொருவரானுங்
கொடியபாவியர் பிருமரேதசாலே
கொளுத்தக்கொல்லவெகு தண்டனைகளேனும்

படுவாரென்சம்பந்தரல்லவெனுஞ்சுலோகப்
படிசிந்தித்தெழுந்துபணிந்தா ரிவர்தானுஞ் (சாந்த)
நிறைகுடந்தளும்பாதென்னும்படிக்கே
நிலையினின்றசர்வதந்திரச் சுதந்திரர்
குறைகுடங்களானற் கூத்தாடியேநிற்கும்
கொள்கையுலகுக்காஞ் சகலமந்திரத்
துறைகளறிந்தவமொன்றுமறியார்போற்
சொல்வர்சரிதானேபூவி லெங்குந்திர
மறையவர்கடுதி வைஷ்ணவசிகா
மணிவிச்வாமித்திரகோத்திர சந்திரர் (சாந்த)

## சத்தியாகாலத்துக் கெழுந்தருளியது.

### கட்டளைக்கலித்துறை.

பகரத்தினைப்பொழுதாகிலுமச்சுதன்பாதமலர்ந்
தகரத்தினுற்கொண்டுகூப்பவேகாந்தஸ்தலத்தையெண்ணிக்
ககரத்தயல்முன்விரிசூழ்ந்தசத்தியகாலமென்னும்
அகரத்திலேதேசிகர்வாசமுஞ்செய்வதாகினரே.

### இராகம்-புன்னுகவராளி-தாளம்-சாப்பு.

கண்ணிகள்

க. களங்கமில்லாச்சத்தியாகாலமெனுமக்கிர
காரமிவராலேசிறந்தது - புகழ்
விளங்குமக்காலத்தி லட்சுமணுரியர்திரு
மேனியில்வைவர்ணியம்பிறந்தது

உ. குமாரருமின்றி யிருந்திடவுங்கண்டு
கொண்டவர்தேவிகள் ஓலுவரே - எங்கும்
சமானமில்லாத பாகவதாப
சாரமிதுவென்றுசொலுவரே.

ங. வேதாந்தாசாரியர் சன்னிதியினுஞ்சென்று
வேண்டியபசாரக்ஷாபணஞ் - செய்தால்
சாதாரணமாகவெல்லாநன்மையுந்
தாமுண்டாமென்றதேசோபனம்.

ச. இங்கிதைக்கேட்கவந்த லட்சுமணுசாரியரு
மேற்றுக்கொண்டார்கிருபாவருஷரே - தவள
சங்கத்திருப்பல்லக்குமுதலாகிய
சம்பிரமமுள்ளமாபுருஷரே.

ரு. தமதுவிருதெல்லாங்கோயிலிலேவைத்துத்
தாமுந்தேவிகளுமாகவே — பாத
கமலநடையாகச்சத்தியகாலத்துக்கே
கண்ணனருள்பாடியேகவே.

சு. சதிராகலட்சுமணாசாரியரும்வேதாந்தா
சாரியார்தமைத்தேடிநண்ணினு - ரங்கே
எதிர்கொண்டுசாஷ்டங்கமாகப்பிரணமந்தா
னெங்கள்வேதாந்தாசியர்பண்ணினர்.

எ. அங்கவர்தந்திருமாளிகையிலெழுந்
தருளச்செய்துபசரித்தனர் - வேத
புங்கவர்லட்சுமணாசாரியார்வந்தவகை
பொருந்தவெல்லாமும்விரித்தனர்.

அ. திவந்தோறும்பாஷியவியாக்கியானமேகால
க்ஷேபமாகவேசாதித்து - அதி
னனந்தரம்பிள்ளைஸ்ரீபாததீர்த்தத்தை
யங்கீகாரஞ்செய்துபோதித்து.

கூ. தேவிகளுக்கும்பிரசாதித்திருக்கஅத்
தீர்த்தத்தின்வைபவத்தாலே - அவ
ராவியுடலுக்குமானந்தமாயொரு
ஆண்டுக்குள்ளாயுடன்மேலே,

க0. சேர்ந்துஇருந்திட்டரோகமுந்தீர்ந்துடன்
தேவிகளுங்கர்ப்பந்தரிக்க - மனங்
கூர்ந்தந்தலட்சுமணாசாரியரும்மகிழ்ச்சி
கொண்டுமிகவுபசரிக்க.

கக. அத்புதவேதாந்தாசாரியார்தம்முடை
அநுமதிபெற்றுநீடி - நாளுங்
கற்புமிகுந்திடுந்தேவிகளுடனே
கலந்திருந்துகொண்டாடி.

க உ. நாற்றிசைசொல்லுமரங்கந்தனைச்சேர
நல்லகுமாரரும்பிறக்க - அந்தத்
தீர்த்தமகிமையால்வந்தபிள்ளைநாமந்
தீர்த்தப்பிள்ளானென்றுசிறக்க

கரு, பிரபலமாகுந்திருத்தந்தைபேருடன்
பிள்ளைக்கிசைந்திடும்பேர்கள் - நலந்
தரவேயாயியாழ்வார்பிள்ளையென்றுகூட்டிச்
சாற்றினரென்றுஞ்சொல்வார்கள்.

கச எற்குந்தீர்த்தப்பிள்ளானுயியாழ்வார்பிள்ளான்
என்றேயிரண்டுபேர்தாங்கி - இந்தப்

பார்க்குள்ளேலட்சுமணாசார்யர்குலந்தான்
கனைத்ததையாபுகழோங்கி.

௰ரு. மண்டலமீதிலேயெங்கெங்கேதான்கவி
வாதிசிங்கர்க்கிணைதேசிகர் - ஆருங்
கண்டதுண்டோசொல்லும்வெகுப்ரபந்தத்தைக்
காட்டியருள்செய்தார்பூசிகர்.

௰சு பிள்ளையென்றால்தூப்புற்பிள்ளைபிள்ளைமற்ற
பிள்ளையெல்லாமணிற்பிள்ளையே - யென்று
தெள்ளுமொழியாகவெங்குஞ்சொல்லப்பைய
தீட்சிதர்சொன்னாரேவெள்ளையே.

௰எ .சாண்கட்டைமீதிலேயாயிரந்துவாரத்தைத்
தானிட்டவேதாந்தமூர்த்தியே - இவரைக்
காண்கநினைக்கவேயெண்ணியதெல்லாந்தாம்
கைகூடுமென்பதுங்கீர்த்தியே.

## கோச்சகக்கலிப்பா.

பாயுநீர்பொன்னிசூழ்ந்த பதிசத்தியாகாலமென்னும்
மேயினவக்கிரகாரத் தேகாந்தமிசைந்தபிள்ளை
மாயிருஞாலத்தேயாழ் வார்கடாம்பதின்மர்பாடுங்
கோயிலினிணைப்பைநெஞ்சிற்கொண்டிட்டார்கண்டிட்டாரே

## தரு-இராகம்-தன்னியாசி-தாளம்-ஏகம்.

### பல்லவி.

சிந்தைசெய்தாரே - வேதாந்த - தேசிகர்தாமே.

### அனுபல்லவி.

அந்தச்சீரங்கநாயகரைநாந் தினமுமறவேனே - என்று (சிந்தை)

### சரணங்கள்.

தற்பரமாகியதேவசம்பந்த சாத்திகநாமாவைக்-கொண்டே
அற்புதமாகவுதயஞ்செய்த வரங்கதாமாவைச் (சிந்தை)
மிஞ்சுபுகழ்க்கதிர்வீசுமரங்கவி மானமதின்பாலே - நல்ல
மஞ்சுழைக்குண்மரகதமென்னுமணிதனைப்போலே (சிந்தை)
ஆதிசேடனைச்சயனமெத்தையாயங்கைதலைக்காணி - கடல்
மாதுயிராகநீண்டகண்வளர் வனைமனதாணி (சிந்தை)
திருவரங்கப்பெருநகருள் தெண்ணீரென்றெடுத்து - நல்ல
கருமணியைக்கோமளத்தைக் கண்டேனெனத்தொடுத்து (சிந்தை)
மாயோனேயென்றுமடியவரென்றும்வாழ்த்திடுபாசுரமே-இவை
வாயாற்சொல்லிமனத்தாற்சிந்தித்துவந்ததுமீகாரமே (சிந்தை)

## தேசிகர் கோயிலுக் கெழுந்தருளியது.

### விருத்தம்.

சிந்தைசெய் துசத்தியாகாலந்தன்னிற்
றேவியுடன்குமாரரையும்வைத்தாங்கம்
வந்துசேர்ந்தடியவரோடிருந்துபிள்ளை
மங்களாசாசனஞ்செய்திருக்குநாளி
சைந்துகாவிரிக்கரைமண்டபத்தரங்கர்
தாந்திருவோலக்கமாயிருந்தஹோர்நா
ளந்தநாட்டுருக்கர்வந்துசெய்தசெய்தி
யார்கடாஞ்சொல்வரந்தப்போர்கடாமே

### இராகம்-ஆரபி-தாளம்-ஆதி.

### கண்ணிகள்.

க மோகாந்தகாரர்க்கொள்ளைக் காரத்துருக்கர்படை
முடுகிவந்ததெனவேயொருவர்பார்த்தவுடன்
ஏகாந்தகாரமாகச்சொல்ல அதிகாரிதானுடனே
யெம்பெருமான்முன்னேசாந்துக்காப்புச்சாத்த.

உ அங்கிருந்துபிள்ளை முதலானோர்கள்திருவுள்ள
மறிவதாகப்பார்க்கச்சீட்டுப்போட்டு
அங்கதுபுறப்பட வேண்டாமென்றிருக்கவே
அறிந்துகொண்டனைவருமிருந்தாட்டு

ங எதுவந்தாலும்வரட்டு மென்றுநிர்ப்பயராகி
யிருந்தார்தூப்புற்பிள்ளையாமிவர்வாசித்து
அதிகாரியதைவிசுவசியாமற்பிள்ளைலோகா
சார்யருடனே தானுலோசித்து.

ச. கொண்டுமுன்னோர்விக்கிரகமேறியருளப்பண்ணிக்
கொண்டோலக்கமீதிலுமாராதனங்
கண்டருளுகிருரென்று திரைவளைத்துப்பாவாடை
கட்டிக்கொண்டிருப்பார்போல் பேதனம்.

ரு. நாடியழகியமணவாளப்பெருமாளையும்
நாச்சியாரையுந் திருப்பெட்டகத்தில்
மூடியெழுந்தருளப்பண்ணிக்கொண்டவர்தாமே
முனைந்துசெல்கிருரையாகாட்டகத்தில்

சு. பிள்ளைலோகாசாரியருமவர்களும் வில்லுக்கொண்டு
பின்செல்வாரில்லாமையால்தாமுஞ்சென்றூர்
கொள்ளைக்காரத்துருக்கர்கள்பரிமேலே வரக்கண்டு
கொண்டுதிருவோலக்கங்கலைந்துநின்றூர்

எ. பெருகுங்கலகத்தையானென்னசொல்வேன்சந்நிதியிற்
பெருமாளையுங்காணுமையதினாலே
பரபரப்புடனேடமாட்டாதிருக்கும்வேளை
பாருமவ்வளவிலேபிங்குமேலே
அ. சுருதப் பிரகாசிகாசார்யர்தாமெழுதியருளிய
சுருதப்பிரகாசிப்பட்டோலையையந்தச்சிட்டர்
அதுதன் குமாரரறியாப்பிள்ளைகள்வேதாந்தா
சார்யபட்டர்பராங்குசபட்டர்
கூ. தாமவரிருவரையும்வேதாந்ததேசிகர்
சந்நிதிதன்னிலே காட்டிக்கொடுத்துப்
பூமியினீரெப்படியேனும் பிழைத்திருந்து
புகழ்சுருதப்பிரகாசிகையைத்தொடுத்து
ம. பார்த்துப்பிரபலஞ்செய்தென்குமாரரிருவரையும்
பரிபாலனஞ்செய்குவீரென்றுகாட்டி
எத்தினர் துருக்கர்கள்கூடிவந்தங்குள்ளாரை
யிமிசைசெய்தாரையாதிமைசூட்டி.

அழகிய மணவாளர் காடேற எழுந்தருளியதும்,

சுருதப்பிரகாசிகா 'பிரவசனமும்.

விருத்தம்.

பத்தியென்பதொன்றுமில்லாப்பவத்துருக்கப்
படைவருவதறிந்தெழுந்திட்டிவரேநல்ல
புத்திமான்காவேரிமணலிலங்கே
புதைத்தசுருதப்பிரகாசிகையையேந்திக்
கற்றறிந்தார்சுருதப்பிரகாசிகார்யர்மைந்தர்
காணுமாங்கந்துருக்கர்காடாய்கண்டிச்
சத்தியாகாலந்தனிலேகண்டாவ
தாரர்தாமிருந்தனர்கப்பீர்தாமே.

இராகம்-பூரிகல்யாணி-தாளம்-ஆதி

கண்ணிகள்.

க. ராமநுஜர்க்கபி மதமாம்-திரு
நாராயணபுர மிதமாம்—என்று
காமிதங்கொண்டங்கே நாடித்—திருக்
கல்யாணியிலேநீ ராடி.
உ. பிரபத்திமார்க்கங்களாஞ் சாஸ்த்ரம்—நெறி
பிரபலமிருந்திடு; ஸ்தோத்திரம்

கபர்த்திமதமென்று சந்தித்துப்—பாஷ்ய
காரர்திருவடி வந்தித்து

௩. நாற்றிசையும்புகழ் வெள்ளையே - செல்ல
நாரணனைச்செல்வப் பிள்ளையே
போற்றியதுகிரி நாச்சியார் - தாமே
புருஷகாரமாக வாய்ச்சியார்

௪. இந்தவிருவரைப் பணிந்தே - கெஞ்சி
யெம்பெருமானென வணிந்தே
அந்தத்தேசந்தன்னைத் தேறியே - மங்க
ளாசாசனஞ்செய்து கூறியே

௫. சத்யகாலமென்ற ஊருக்கே - வந்து
தானேரங்கநாதன் பேருக்கே
நித்தியானுசந்தானம் பண்ணுவா - ரிடர்
நீங்கும்படியாக எண்ணுவார்

௬. துலுக்கர்காடாகவே மண்டிற்றே - இதைத்
தொலைப்பதெப்போதிங்கே கண்டித்தே
சிலுக்குக்கொத்தாகவே கொத்தியே - வினை
தீர்ந்துநமக்கென்றும் வெற்றியே

௭. கண்டழகிய மணவாள - ரரங்
கத்தில்வரவோண நாளர்
விண்டுவபீதித் தவத்தையும்
விண்ணப்பஞ்செய்தா ரனைத்தையும்

௮. என்னசொல்வோமின்னஞ் சொல்லுவோம் - வினை
யேதேதுவந்தாலும் வெல்லுவோம்
பொன்னிருசூழரங்கந் தனையே - விட்டுப்
போந்தருளிமுனை வனையே

௯. கூடிவெங்கானலி னுடே - வழி
கொண்டுசிலவும்பி னேடே
கூரடியறிந்திட்டார் கள்ளர்கள் - வந்து
கொள்ளையிட்டார்கபட் டுள்ளார்கள்

௰. அப்படிலோகார்யர் தடுக்க - வந்து
அவர்பொருளுங்கொள்ளை கொடுக்க
இப்படிப்பட்டுப் படாமலே - யந்த
எம்பெருமானை விடாமலே

௰௧. சோதிடபுரத்திற் சேர்த்தன - ரங்கே
சுரத்தாற்றிருநாட்டைப் பார்த்தனர்
சோதனையைநிரு வகிப்பா - ரென்றுந்
தொண்டர்துன்பத்தைச் சகிப்பார்

| | | |
|---|---|---|
| ௰௨. | பெருமாள்விளையாட்டை | யாடுவார் - அதைப் |
| | பிரமருத்திராதிகள் | தேடுவார் |
| | திருமாலிருஞ்சோலை | வாசந்தான் - குல |
| | சேகராழ்வார்திவ்ய | தேசந்தான் |
| ௰௩. | கொல்லங்கொச்சிகூட | ஞட்டிலே - வாசங் |
| | கொண்டிருந்துங்கோழிக் | கூட்டிலே |
| | செல்லவதின்பின்னுநம் | மாழ்வார் - திவ்ய |
| | தேசந்தனைச்சேர்ந்தங்கும் | வாழ்வார் |
| ௰௪. | அருகுள்ளவெம் | பெருமான்களை - யவ |
| | ராதரித்தோங்கிநல் | லாங்களைத் |
| | திருமுத்தின் | சிங்காதனத்திலே - கூடச் |
| | சேர்த்துநம்மாழ்வார் | மனத்திலே |
| ௰௫. | நேராய்வரிசை | சமர்ப்பித்தார் - அங்கே |
| | நின்றும்புங்கனூர் | தனையுற்றூர் |
| | நாராயணபுரத் | துள்ளேயே - வாழநி |
| | னைத்தழகின்செல்வப் | பிள்ளையே |
| ௰௬. | கூடவுங்கொண்டிருந் | தத்திலே - வட |
| | குன்றுதிருவேங்க | டத்திலே |
| | நாடினதம்மலை | யோகந்தான் - வெகு |
| | நாளிருந்ததும்வை | போகந்தான் |

## விருத்தம்.

மிஞ்சுபுகழ்வேங்கடமாமலையின்மீதே
வீற்றிருந்தாரழகுமணவாளரங்கே
செஞ்சியதிபதிகோபணார்யனென்பான்
சேஷகிரிவாசனையேபணியவந்து
கொஞ்சுபரியானைமேலுங்காணிக்கை
கொண்டுவந்துதுருக்கர்செய்ததறிந்துபின்னும்
வஞ்சனையாய்ப்படையெழுப்பித்துருக்கர்பொல்லா
மண்டைதானுருட்டியதோர்சண்டைதானே.

## தரு-இராகம்-மோகனம்-தாளம்-ஆதி.

### பல்லவி.

பாரியானசண்டையே - கோப - ணார்யராஜன்சண்டையே.

### அனுபல்லவி.

| | |
|---|---|
| பாரியதாய்ரண | பேரிமுழக்கொரு |
| சாரியதாகவே | வீரியர்சூழ்வரு |

பாரினிலேமுனே நேரிடுவார்கள்
போரிடுவார்வெகு பேரிடுவாருடன்
பரவுபடை நெருக்க – வருமெதிரிகள்வெஃகத்
தரணிமன்னர்பிரமிக்க–வுரசுவிருது மிக்க (பாரி)

**சரணங்கள்.**

திருவேங்கடபதி சந்நிதிமுன்சென்று
சேவிக்கவென்றவன் பண்டு
வரவேதிருமலை தன்னிலுமழகிய
மணவாளரிருப்பதைக் கண்டு
ஒருதிருவிளையாட் டிதுவென்றுமனுதாபத்
துடனேகோயிலிற் கொண்டு
பெருமாளையெழுந்தருளப் பண்ணவேணுமென்று
பெரிதாகியபத்தி யுண்டு - அதைப்
பிலுக்கவே காட்டி-அநியாயத்துலுக்கரைவாட்டி-தருமத்தின் [சொல்லிப்
பெருங்கணையெடுப்பேன்-மனு நெறியொருங்குடன்றொடுப்பேன் - என்று
பிசகாமற்பெருமாளைப் பாவிக்கைகுவித்தா
னிசைசிங்கிபுரத்திலே யெழுந்தருளுவித்தான்
பெரிதானகோயிற்குள முண்டாக்கிநண்ணினன்
பரிவாயனைத்தழகுங் கண்டருளப்பண்ணினன்
பின்புதுலுக்கரை வெல்லத்தென்புகொண்டதுவுநல்ல
பேரானதீர னையா வீராதிவீரனையா (பாரி)

ஆரெங்கும்புகழ்கின்ற சிங்கிபுரத்தில்வாச
மாமழகியமண வாளன்
ஸ்ரீரங்கநகரத்தைத் துருக்கனுஞ்சூறையடிச்
சேர்ந்திருந்தானைய சண்டாளன்
கோரங்களாகக்கண்ண புறத்திலிறங்கிக்கொண்டு
கோட்டையெடுக்கக் குண்டகோளன்
பாரெங்கும்புகழ்கோடி மதில்கள்கோபுரங்களைப்
பற்றிக்கொண்டொரு காணியாளன் - அவன்
பங்கிலுற் றானே திருமணற்றூண் சிங்கப்பி ரானே–வேதையது
பண்ணினன் வஞ்சந்–தயிரியந்தா னெண்ணினனெஞ்சம்–இந்தச்சீமை
பணங்கள்காசுகள் மலைமலையாகக்கொட்டிக்
கொணர்ந்துகுவித்துக்கோட்டை கொம்மைகளையுங்கட்டிப்
பண்ணிச்சகலகாரிய நான்செய்குவேன்முன்ன
மென்னைப்பிரதானிக்கமாய் வைத்திடிலென்ன

பலுக்கிச்சொல்லவுந்தொட்டான் — துலுக்கனப்படி விட்டான்
பப்பளிக்கையின்றிமெய்தான்கொப்பணார்யன்வரச்செய்தான் (பாரி)

துலுக்கன்கீழ்த்துரைகளை உளவாக்கிக்கோட்டைவாசல்
துறந்துவிட்டதி றற்பாரி
வலுக்கும்ரேகலாவோடு பீரங்கிதுபாக்கியின்
வரிசைபட்டாகத்தி கடாரி
குலுக்குஞ்சுக்குமாந்தடி யெறியீட்டியெறியம்பு
குறுந்தடிகுண்டாந் தடிசூரி
பிலுக்கும்படைகளொடு சதுரங்கபலத்துடன்
பேரிகர்ணடங் காபூரி-வெகு

பிரபலங் கொண்டு - கொப்பணார்யன் வருவது கண்டு - நலசிங்கப்
பிரானெதிர் சாற்றத்—துலுக்கனுக்குச் சுராபான மேற்ற—அந்தவேளை

பிலுக்கியுளவுகண்டு கோட்டைலங்கையேறினன்
துலுக்கர்களைவளைத்து மாட்டிவெட்டிச்சீறினன்
பிணக்காடிரெத்தவெள்ள மானசண்டைதாக்கினன்
வணக்கமில்லாதவரை மறலிநாட்டிற்போக்கினன்
பிண்டமாகச் சிலபேர்கள்—முண்டமாகச் சிலபேர்கள்
பிரமத்துவேஷிகளைப்போக்குந்-தரிசனவிரோத நீக்கும் (பாரி)

## அழகியமணவாளர்கோயிலுக்கெழுந்தருளியதும் அபீதிஸ்தவம் அருளியதும்

### விருத்தம்.

கொடியேற்றியிப்படிக்கேகோபணார்யன்
கீர்த்தியாய்த்துருக்கர்களைச்செயித்தநல்ல
குடியேற்றிக்கோயிலெல்லாமலங்கரித்துக்
கொண்டழகுமணவாளர்தமையுமங்கே
படியேற்றிநாச்சிமாருடனேசேர்த்த
பரிவுகண்டுசகுடும்பாகப்பிள்ளை
அடியேற்றிமங்களாசாசனந்தா
னளிசெய்தாரரங்கர்திருப்பளிசெய்தாரே

### தரு-இராகம்-உசேனி-தாளம்-ஆதி.

### பல்லவி.

மங்களாசாசனமும் ரங்கநாயகர்க்கேசெய்
யுங்கண்டாகிருதிவாதிசிங்கரே.

அனுபல்லவி

பொங்குகாவிரிநடுப் பங்கசாசனன்தொழு
மங்கனுமணியாம்ஸ்ரீ ரங்கநாயகியுடன். (மங்க)

சரணங்கள்

ஆர்த்திநீர்ப்பெருமானைபுஞ் சேர்த்திபிலெழுந்தருளச்
சேர்த்தகோபணாரியன்றன் கீர்த்தியேவளர்கவென்று. (மங்க)

ஆனியாநீலமென்றுந் தானந்தக்கோபணாரிய
ஞானவன்மீதுசுலோகம் மானுபாவர்சொன்னாரே. (மங்க)

தினவரிசையோடாரா தனவரிசையுச்சவக்
கனவரிசையுந்தான்னிய தனவரிசையும்மிஞ்ச (மங்க)

பாங்குகோயிற்றிருமலை யாங்குளபெருமாள்கோயி
லோங்குநாராயணமுதற் றீங்குவராதபடிக்கு (மங்க)

வகையாம்பாஷியஞ்சுருதப்பிரகா சிகைமுதலாங்கிரந்தங்களைச்
சகமதிற்பிரவர்த்திசெய்ததே சிகன்திருவுள்ளமகிழ்ந்து. (மங்க)

அண்டர்நாயகனேயென்றுங் கொண்டல்மேனியனேயென்றும்
மண்டலமெங்குங்கொண்டாடுந் தொண்டர்களுடனேகூடி. (மங்க)

விருத்தம்.

சீரிலங்குமுபயகாவேரிரங்கர்
திருவடிக்கேயுபயகவிசிறந்துநாளும்
பேரிலகுங்குமுபயவேதாந்தாசார்யார்
ப்ரபலராம்வாதிசிங்கரெனவேவந்த
காரிலங்குமேனிவேங்கடேசனென்னுங்
கண்டாவதாரரிவர்தேவிகூடப்
பாரில்வந்துதிவ்யதம்பதிசங்கற்பம்
பலிக்கின்றார்கீர்த்திகொண்டுசொலிக்கின்றாரே.

தரு-இராகம்-மோகனம்-தாளம்-ஆதி.

பல்லவி.

வேங்கடநாதார்யரிருந்தாரே-தென்னரங்கத்தில்
வேங்கடநாதார்யரிருந்தாரே.

அனுபல்லவி.

பாங்காகவரங்கப் பதிமிகவிளங்கப்
பாங்குதரிசனப் ப்ரவர்த்தகமிலங்க. (வேங்)

சரணங்கள்.

தெரிசனர்கூடித் திருவடிநாடி
ஸ்ரீவைட்ணவர்கோனே தேவரீரெனத்தானே (வேங்(

வருகவிவாதி வணங்கிடவோதி
மண்டலமெங்குங்கீர்த்தி வஹித்ததேசிகமூர்த்தி (வேங்)

அதிகாரப்பட்ட மவரிடுஞ்சட்டம்
ஆரும்பூசித்துப்போற்ற அநந்தகவியுமேத்த (வேங்)

தெம்பதிவிரதர் செல்வரும்வரதர்
சிஷரெல்லாரும்வேண்டத் தெரிசனத்தையேயாண்ட (வேங்)

## விருத்தம்

கவிவாதிசிங்கர்தாந்திவ்ய
கண்டாவதாரரிவராங்கந்தன்னிற்
செவையாகத்தரிசனத்தைநடத்திவந்தார்
தெளிந்தவிவர்பின்வாதனைஞர்தாமும்
புவியெங்கும்வாதியரைவென்றடக்கிப்
பொருந்தியவித்தரிசனத்தைவாண்டாரித்தைச்
செவிகொள்வோர்வேண்டியதைப்பெற்றுவாழ்வார்
சித்தந்தானென்பதும்ப்ரசித்தந்தானே.

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம:

ஸ்ரீமத்வேதாந்ததேசிகவைபவப்பிரகாசிகைக் கீர்த்தனை

முற்றிற்று.

---



இப்புஸ்தகம் கிடைக்குமிடம்:—

இன்னம்பூர். ரா. ஸுந்தரராகவஅய்யங்கார்

22. மேட்டுத்தெரு,

கும்பகோணம்.

---

சி. ர. ஸ்ரீநிவாஸபாட்டாசாரியார்,

ஸ்ரீநிவாஸ விலாஸ புஸ்தகசாலை,

16, பாட்டாசாரியார் தெரு

கும்பகோணம்.

---